# தீக்கதிர்


**நவம்பர் புரட்சி மலர்**

“தீக்கதிர் நவம்பர் புரட்சி மலர்” வெகு சிறப்பாக தயாராகிக் கொண்டிருக்கிறது.

நவம்பர் 5, 6-ஆம் நாட்களிலேயே உங்கள் கைக்கு கிடைத்துவிடும். முன் பணம் அனுப்புபவருக்கே பிரதிகள் அனுப்பப்படும்.

48 பக்கங்கள் ★ ஒரு ரூபாய்

உங்கள் பிரதிக்கு இன்றே முந்துங்கள்

குறிப்பு :— செப்டம்பர், பாக்கியில் பாக்கி அனுப்பாத தீக்கதிர் ஏஜெண்டுகளுக்கு அடுத்த வாரத்திலிருந்து தீக்கதிர் கண்டிப்பாக நிறுத்தப்படும். —நிர்வாகி


கதிர் 7] 26—10—69 கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) வார ஏடு காசுகள் 25 [மலர் 6


# துரோகிகளின் கடைசி நாடகம்!

**கேரள ஐக்கிய முன்னணி மந்திரிசபையை ஒழித்துக் கட்டும் காங்கிரசின் முயற்சியின் கடைசி அத்தியாயம் திருவனந்தபுரத்தில் நடைபெற்றுக்கொண்டிருக்கிறது!**

**இந்தக் காட்சி நிலச்சீர்திருத்தச் சட்டம் நிறைவேறிய அதே தினத்தில் இருந்தே ஆரம்பமாயிற்று!**

**முதலமைச்சர் தோழர் நம்பூதிரிபாட் அவர்கள் கிழக்கு ஜெர்மனியிலிருந்து திரும்பி வரும்வரைக்கூட காத்திராமல், சகோதரக் கூட்டணி கட்சிகளுக்கு அவர் விடுத்த வேண்டுகோளை நிராகரித்துவிட்டு, அவர் வருவதற்கு முன்பே கூட்டணியை முதுகில் குத்திக கொலை செய்யும் கூரியவாள் தயாராக வைக்கப்பட்டிருந்தது.**

அவர் வந்து இறங்கிய உடனேயே குட்டிக்கூட்டணியின் கொடுவாளும் செயல்பட ஆரம்பித்தது.

ஐ. மு. விற்கு துரோகம் செய்துவிட்டு ஓடிப்போன வலது கம்யூனிஸ்டு, முஸ்லிம் லீக், ஐ. எஸ். பி., ஆர். எஸ். பி. ஆகிய கட்சிகள் விமான நிலையத்தில் தோழர் ஈ. எம். எஸ். வந்திறங்கிய ஒருசில மணி நேரத்திலேயே தங்களின் இறுதி **எச்சரிக்கையை** அவரிடம் கொடுத்தனர். அக். 18ஆம் தேதிக்குள் வெலிங்டன் மீது மட்டும் விசாரணை செய்ய வேண்டும் என்ற தங்களுடைய தீர்மானத்தை முதலமைச்சர் அமுல் நடத்தாவிடில் மந்திரிசபைக்குக் கொடுக்கும் தங்களது ஆதரவை வாபஸ் வாங்கிக்கொள்வோம் என்ற இறுதி எச்சரிக்கையைக் கொடுத்தார்கள்.

ஊழல் ஒழிப்பு சூரப்புலிகளாக வேஷமிடும் இவர்கள் தங்கள்மீது கூறப்பட்ட புகார்களையோ, அல்லது ஏனைய பிரச்னைகளைப் பற்றியோ, கூட்டணிக் கூட்டத்தைக்கூட்டி விசாரிக்க முன் வந்தார்களா? இல்லை. கூட்டணியைப் பாதுகாக்கத் தாங்கள் இப்பொழுதுகூடத் தயாராக இருப்பதாக வாய்ச் சவடால் அடிக்கும் இவர்கள் தனியாகக் ‘குட்டிக் கூட்டணி” க் கூட்டங்களை நடத்தியது ஏன்? நடத்தி ஐ. மு. ஒழிப்பு முடிவுகள் எடுத்துப் பத்திரிகைகளுக்கு அறிக்கை மேல் அறிக்கை விடுத்தது ஏன்?

தாங்கள் தனி கோஷ்டியாக திட்டவட்டமாக, தெளிவாக ஊரறிய, உலகறிய பறைசாற்றிக்கொண்டதேன்?

18ஆம் தேதிக்குள் நடவடிக்கை எடுக்கவில்லையானால் ஐ. மு அரசுக்குக் கொடுக்கும் ஆதரவை வாபஸ் பெறுவோம் என்று அறிவித்ததும், இத்தகைய அறிவிப்புகள் வெளியானவுடன் காங்கிரஸ் தலைவர்கள் ஒருவர்பின் ஒருவராக, ‘நம்பூதிரிபாடு மந்திரி சபை வீழ்ந்தால், மாற்று மந்திரி சபைக்கு நாங்கள் ஆதரவு கொடுப்போம்” என்று பதிலை தந்திபோல் அறிவித்துக் கொண்டிருந்த முதலலாய் எதைக் காட்டுகின்றன?

ஐக்கிய முன்னணி என்பதை உடைத்துவிட்டு, மாற்று அமைச்சரவையை அமைக்க ஈ. எம். எஸ். நாடு திரும்புவதற்கு முன்பே தயாராகி விட்டார்கள் என்பதைத் தானே! ஐ. மு.வை உடைத்த கேரள மக்களின் துரோகிகளே! இதற்கு உங்களது பதில் என்ன?

## வேறு வழியில்லை

பூர்ஷ்வா சட்டசபைவிதிமுறைகளைப் பயன் படுத்தி, காங்கிரஸ் ஆதரவுடன் சதிவேலைகள் எல்லை கடந்து சென்றன. தோழர் ஈ. எம். எஸ். நம்பூதிரிபாட் நடவடிக்கை எடுத்தார். எம். என். கோவிந்தன் நாயர், டி. வி. தாமஸ், பி. ஆர். குரூப், வெலிங்டன் ஆகியோர் மீது கூறப்பட்ட குற்றச் சாட்டுகளுக்கு ஆதாரமிருக்கிறதா என்பதை விசாரிக்க முன்னாள் நீதிபதி திரு. முல்லா தலைமையில் கமிஷன் நியமிப்பதாக அறிவித்தார். அதுவரையில் எவரும் விலக வேண்டியதில்லை என்றும் அறிவித்தார். ஆனால் இந்த வேண்டுகோளையும் ஏற்க மறுத்து குட்டிக் கூட்டணி அமைச்சர்கள் அனைவரும் ராஜினாமாச் செய்து நாடகத்தின் இறுதிக் காட்சியையும் நிகழ்த்திக் கொண்டிருக்கிறார்கள். கூட்டணியை இ. எம். எஸ். “உடைத்து விட்டார்” என்று இவர்கள் கூக்குரலிடுவதில் பொருளுள்ளதா? ஓராண்டுக்கு முன்பிருந்தே கூட்டணியை ஒழித்துக்கட்ட வலதுசாரி கம்யூனிஸ்டு முன்னாள் அமைச்சர் டி. வி. தாமஸ் முன் முயற்சியில் கூட்டுச்சதி நடந்ததும், அந்தச் சதியில் ஈடுபட்டவர்கள் இதே நான்கு கட்சித் தலைவர்கள் தாம் என்பதும் இதை தோழர் நம்பூதிரிபாட் அம்பலப்படுத்தியதும் உலகறிந்த விஷயம்.

அன்று ஆரம்பமான இந்தச் சதி, இந்திரா காந்தி கோஷ்டியைப் பற்றிய வலதுசாரி கம்யூனிஸ்டுத் தலைமை எடுத்துள்ள சமீபத்திய முடிவிற்குப் பின்பு தீவிரமாகி மூன்னுக்கு வந்துள்ளது.

அரசுடன் கூட்டுச்சேருவது இந்திரா அதற்கு ஆதரவு திரட்டுவது என்ற குறிக்கோளுடன் பகிரங்கமாகச் செயல்பட முன்வந்தபின் இந்தக்குறிக்கோளுக்கு இடையூறாக இருக்கும் தங்களுடைய உறவு முறைகளையெல்லாம் சீர்திருத்தி அமைத்துக் கொள்ள வலதுசாரிகள் முன் வந்தார்கள்.

மேற்கு வங்கத்திலும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியுடன் கொண்டுள்ள தங்களது உறவை ரத்துச்செய்துகொண்டால்தான் இந்திராவின் காங்கிரசுக்கு முறையாக வால் பிடிக்க முடியும் என்ற முடிவுக்கு வந்தார்கள்.

இந்த முடிவுக்குப்பின் எழுந்துள்ளதே இன்று கேரளத்திலும், வங்கத்திலும் நடக்கும் “குட்டிக்கூட்டணி” வேலைகள்!

கேரளத்தில் நிலச்சீர்திருத்த மசோதா நிறைவேறுவதால் அதிருப்தியடைந்தவர்கள்


(12-ஆம் பக்கம் பார்க்க)


**கடைசி செய்தி**

## துரோகிகள் கவிழ்த்தனர்!

மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஐக்கிய முன்னணியை உடைத்துவிட்டு வலதுசாரி கம்யூனிஸ்டுகளின் முன் முயற்சியில் 4 கட்சி குட்டிக் கூட்டணி அமைத்து, காங்கிரஸ், கேரள காங்கிரஸ், பேராதரவுடன் கேரள ஐக்கிய முன்னணி அரசை கவிழ்ப்பதில் வெற்றி கண்டு விட்டார்கள்.

ஐக்கிய முன்னணியின் துரோகிகளுக்கு காங்கிரஸ், கேரளா காங்கிரஸ் ஆதரவுடன் கிடைத்த வாக்குகள்: 69; அமைச்சரவைக்கு கிடைத்த வாக்குகள்: 60. தான் எதிர்க்குப், தீர்மானத்தை சட்ட சபை அங்கீகரித்தால் அமைச்சரவை ராஜினாமா செய்து விடும் என்று தோழர் இ. எம். எஸ். முன்பு அறிவித்தபடியே கேரள கவர்னரிடம் தனது அமைச்சரவையின் ராஜினாமாவை தோழர் ஈ. எம். எஸ், இன்று சமர்ப்பித்து விட்டார்.

கேரள மக்களுக்குப் புரிந்துள்ள இம்மாபெரும் துரோகத்திற்கு சரியான பதில் இனி கேரள மக்களிடமிருந்து கிடைக்கும் என்பதில் சந்தேகம் வேண்டாம்.

தீக்கதிர்

# உண்மைகள் வெடிக்கின்றன!

ஏகபோக முதலாளித்துவப் பத்திரிகையாளருக்கு நாம் நன்றி செலுத்துகிறோம் என்று நீங்கள் ஆச்சரியத்தில் மூழ்கக் கூடும்!

ஏகபோக முதலாளிகளால் நடத்தப்படும் இன்றைய பெரும்பாலான பத்திரிகைகள் கேரளத்திலும், மேற்குவங்கத்திலும் உருவான ஐ. மு. அரசுகளுக்கு எதிராக ஆரம்பத்திலிருந்தே பகைமை உணர்ச்சியுடன் நடந்துகொண்டு வருகின்றன. சமீப நாட்களில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிக்கு எதிராக விஷத்தைக் கக்கி வருகின்றன. அதே சமயத்தில் ஐ. முவை மானவெட்கமின்றிச் சீர்குலைத்துவரும் ஐ. மு. கட்சிகளின் முதுகிலே தட்டிக் கொடுத்து சபாஷ் கூறி வருகின்றன.

அதே சமயத்தில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சம்பந்தப்பட்ட செய்திகளை திரித்துப் புரட்டி அவதூறு செய்யும் வகையில் செய்திகளைத் தந்து மக்கள் மனதைக் குழப்ப முயற்சி செய்துகொண்டிருக்கின்றன. நம்மீது அவ்வாறு அவதூறு பொழியும் அதே சமயத்தில் அவர்கள் அறியாமலேயே உண்மைகளும் வெளியாகின்றன.

**ஒரு உதாரணம்: கோயாங்காவின் இந்தியன் எக்ஸ்பிரஸ் அக். 8-ல் ஒரு தலையங்கம் தீட்டியது. அதில்,**

“மார்க்சிஸ்டுகளின் பெரிய மனிதப் போக்கால் முஸ்லீம் லீக் அவர்களிடமிருந்து பிரியும் நிலைமை ஏற்பட்டுள்ளது. **இதற்குக் காரணம் கிராமப்புறத்தில் நிலச்சுவான்தார்களின் பலத்தைக் குறைக்க முயற்சி செய்வதேயாகும்**” பெரும் தயக்கத்துடன் ஒப்புக்கொள்ளப்பட்ட ஒரு உண்மை இது. முஸ்லிம் லீக் தலைமை என்பது பெரிய நிலச்சுவான்தார்களையும் பெரிய வியாபாரிகளையும் பிரதிநிதித்துவப்படுத்தும் ஒரு தலைமை என்பது இதன்மூலம் ஏற்கப்படுகிறது. அதனால்தான் அது மேற்கூறிய சுயநலமிகளின் நலனைப் பாதுகாக்க ஐக்கிய முன்னணியை உடைக்க முனைந்துள்ளது என்பது இதன்மூலம் ஒப்புக்கொள்ளப்படுகிறது.

நிலச்சீர்திருத்த மசோதா பிரிவு பிரிவாக விவாதத்திற்கு வந்தபொழுது முஸ்லிம் லீகின் சுயரூபம் வெளிக்கு வந்தது. கேரளக் காங்கிரஸ், காங்கிரசுடன் சேர்ந்துகொண்டு நிலச்சுவான்தார்களைப் பாதுகாக்கும் பல திருத்தங்களைச் செய்ய பகீரத முயற்சி செய்து பார்த்தது. லீக் தலைவர்கள் சட்டசபையில் புரிந்த சாகசங்கள் அனைத்தும் நிலச்சீர்திருத்த மசோதாவை எப்படியாவது நிராகரித்துவிடவேண்டுமென்பதற்காகவே.

இரண்டாவது உதாரணம்: கல்கத்தாவிலிருந்து வெளிவரும் ஸ்டேட்ஸ்மென் என்ற ஆங்கில ஏட்டின் தென்னிந்திய நிருபர் அக். 14-ல் கீழ்வருமாறு எழுதுகிறார்:

“சென்ற 31 மாதங்களாக கேரள மந்திரிசபை செயல்பட்ட முறையிலிருந்து பார்த்தால் மார்க்சிஸ்ட் அல்லாத அமைச்சர்களுக்கு தங்களது மந்திரிப் பதவியின் செல்வாக்கும் அதிகாரமும் தங்களது அரசியல் தளத்தினை விரிவாக்கிக் கொள்ளப் பயன்படவில்லை. மாறாக, தங்களது தளங்கள் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் பக்கம் சரிந்துபோவதையே கண்டார்கள். இந்நிகழ்ச்சி இன்றும் தொடருகிறது.

மார்க்சிஸ்ட்கட்சியுடன் உறவை நீடிப்பதால் தங்களுடைய செல்வாக்கு மேலும் குறைகிறது என்பதை வலது கம்யூனிஸ்ட் கட்சி, முஸ்லிம் லீக், ஐ. எஸ். பி., ஆர். எஸ். பி. ஆகிய கட்சிகள் உணர்ந்தன.”

இது ஸ்டேட்ஸ்மென் பத்திரிகையின் நிருபர் எழுதியது.

இதே விஷயம் குறித்து டைம்ஸ் ஆப் இந்தியா விபர்சகர் அக். 14-ல் பின்வருமாறு எழுதுகிறார்;

“சரியோ, தப்போ சகல வழிகளிலும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிக்கு மக்கள் ஆதரவு திரட்டப்பட்டு வருவது, வலது கம்யூனிஸ்ட் கட்சி உயிர் வாழ்வதற்கே பேராபத்து ஏற்பட்டிருக்கிறது என்பதுதான் கேரள நெருக்கடிக்கு உண்மையான காரணம்.”

“மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் வளர்ச்சி இருமுன்னணிகளிலுமுள்ள ஏனைய கட்சிகளுக்கு தலைவலியை உண்டாக்கியுள்ளன.”

“சமாளிக்க முடியாத ஒரு போராட்டத்தில் வலது கம்யூனிஸ்ட் கட்சி, பக்களிடையேயும், சட்டசபையிலும் அதிக செல்வாக்குப் பெற்றுள்ள மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியை முறியடிக்க ஏனைய சிறிய கட்சிகளுடன் இணைந்து செயல்பட முன வந்துள்ளது”.

இவ்வாறு மேற்கூறிய ஏகபோக முதலாளிகளின் ஏடுகள் சில உண்மைகளை தம்மையறியாமலேயே வெளியிட்டதற்கு அவைகளுக்கு நாம் நன்றியுடையவர்களாக உள்ளோம்.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் செல்வாக்கு ஏன் வளர்ந்து வருகிறது என்பதற்கு உண்மையான காரணங்கள் என்ன என்பதை அவர்கள் புரிந்து கொள்வார்களென்று நாம் எதிர்பார்க்கவில்லை. வலதுசாரிகளின் செல்வாக்கு ஏன் கூனிக்குறுகிக் குண்டுச்சட்டிக்குள் போய்க்கொண்டிருக்கிறது என்பதற்கான காரணத்தை அவர்கள் புரிந்து கொள்வார்கள் என நாம் எதிர்பார்க்கவில்லை. அவ்வாறு எதிர்பார்ப்பதும் தவறாகும்.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி ஐக்கிய முன்னணியின் கொள்கைகளை அமுல் நடத்தப் பாடுபடுகிறது. உழைப்பாளி மக்களின் நலன்களையும் பாதுகாக்கப் போராடுகிறது. வலது கம்யூனிஸ்ட் கட்சியோ உழைக்கும் மக்களின் நலன்களுக்குத் துரோகமிழைத்து விட்டது. கேரள நிலச்சுவான்தார்கள் அரசாங்கச் செலவில் தங்களது சுயநலத்திற்கான விவசாய முறைகளை யந்திரமயமாக்கிக்கொள்ள உதவி செய்தார்கள். இதனால் பல்லாயிரக்கணக்கான விவசாயிகள் உழைப்பின்றித் தவிக்கும் நிலைமையை உருவாக்கினார்கள். உழைப்பாளி வர்க்க நலனுக்கு எதிராகச் சென்றதால்தான் மேற்கூறிய கட்சிகள் செல்வாக்கிழந்தன.

இதே காரணத்தினால்தான் மேற்கூறிய கட்சிகள் காங்கிரசுடன் சேர்ந்துகொண்டு ஐ. மு ஆட்சியைக் கவிழ்க்க திட்டமிட்டுச் செயல்பட்டு வருகின்றன. இதனால்தான் முதலாளித்துவ ஏடுகள் உற்சாகமாக இக்கட்சிகளுக்கு அதிக விளம்பரம் கொடுக்கின்றன.

கேரளத்திலும், மே. வங்கத்திலும் ஐ. மு. அரசு செயல்பட்டது ஏகபோக முதலாளிகளின், நிலச்சுவான்தார்களின் வர்க்க நலன்களுக்கு பாதகம் ஏற்படுவதாலேயே இந்த அரசுகளைக் கவிழ்க்க முடிவு செய்துள்ளன.

## கோதையாறு மின் திட்டத்தில் 3000 தொழிலாளர் பட்டினி

குமரி மாவட்டத்தில் உருவாகிவரும் மேல் கோதையார் மின்திட்ட தொழிலாளர்கள் 3000 பேர், வேலையில்லாமல் பட்டினி கிடக்கிறார்கள். தொழிலாளர்களுக்குப் பொறுப்புதாரிகளான காண்ட்ராக்டர்கள் 2—10—69 முதல் கதவடைப்புச் செய்துவிட்டு வேலையில் ஈடுபட்டிருந்த லாரிகளுடன் எங்கோ ஓடிவிட்டார்கள்.

தொழிலாளர்களுக்குக் கிடைக்கவேண்டிய போனஸ், வருடாந்திர சம்பள உயர்வு, பெண் தொழிலாளர்களுக்கு பிரசவகால சலுகைகள், மற்றும் பல கோரிக்கைகளைக் கேட்டு, தொழிலாளர்கள் பெருங்கிளர்ச்சியில் ஈடுபட்டுக் கொண்டிருக்கும்போதுதான், அவர்களைப் பட்டினி போட்டு பணியவைக்க, கதவடைப்பு செய்துவிட்டு ஓடினார்கள் காண்ட்ராக்டர்கள்.

இதைக்கண்டித்து தோழர் கே. எம். மத்தாய் தலைமையில் 9 பேர் 10—10—69 அன்று உண்ணாவிரதமிருந்தார்கள். கீழ் கோதையார் தொழிலாளர்களும் ஆதரவு அளித்தார்கள்.

**மின்சார வாரியமும் அரசினரும் உடன் தலையிட்டு தொழிலாளரின் கோரிக்கைகள் கிடைக்க ஏற்பாடு செய்ய வேண்டுமென்று தொழிலாளர் கூட்டங்களில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.**

—★—

## கொடிகள் ஏற்றி கொண்டாடினர்

பட்டுக்கோட்டை, ஒரத்தநாடு தாலுகாக்களில் மார்க்ஸிஸ்ட் கட்சியும் விவசாயிகள் இயக்கமும் வளர்ந்து வருகிறது கட்சி அமைப்பு வேலைகள் தீவிரமாகியுள்ளன.

வெட்டுவாக்கோட்டை, ராங்கியன் விடுதி, ஊரணிபுரம் ஆகிய இடங்களில் தோழர் ஏ மூக்கையன் தலைமையில் தோழர்கள் ஏ ரெங்கசாமி, எஸ். கலியப்பெருமாள், ஆர். செல்வராசு ஆகியோர் கொடிகள் ஏற்றியும் தோரணங்கள் கட்டியும் விழாக் கோலத்துடன் கொண்டாடினர்.

# தொடக்கப்பள்ளி ஆசிரியர்களின் 3-வது கட்ட போராட்டம்

## மாநில நேரடி நடவடிக்கைக்குழு முடிவுகள்

தமிழ்நாடு தொடக்கப்பள்ளி ஆசிரியர் கூட்டணியின் மாநில நேரடி நடவடிக்கைக் குழுக்கூட்டம் கரூர் நகரில் 19-10-1969-ல் மாநிலத் தலைவர் திரு. எ. எல்லண்ணு தலைமையில் நடைபெற்றது.

மாநில ஆசிரியர் கூட்டணியின் கோரிக்கை செயல் திட்ட மூன்றாவது நேரடி நடவடிக்கையை 14-9-1969-ஆம் நாள் கூட்ட முடிவுப்படி, ஆசிரியர் கூட்டணி கோரிக்கைகளைப் பரிசீலிக்க அரசுக்கு அவகாசம் அளிக்கும் வகையில் இரண்டு மாதகாலம் தள்ளி வைத்தும் கூட, தமிழ்நாடு அரசு இது வரை கோரிக்கைகளை ஏற்றுத் தீர்ப்பதற்கான பேச்சு வார்த்தை நடத்தாததோடு, தீர்வு காணும் நடவடிக்கை எதுவும் எடுக்காதது பற்றி பரிசீலனை செய்து கீழ்க்காணும் முடிவுகளைச் செய்தது.

ஆசிரியர் கூட்டணி மாநிலக் கோரிக்கையின் மூன்றாவது நேரடிநடவடிக்கையான சைக்கிள் அணி நடத்தி 29-12-69 திங்கட்கிழமை சென்னை நகரில் கோரிக்கை ஊர்வலம், பொதுக் கூட்டம், நடத்துவது - முதலமைச்சரிடம் கோரிக்கைகளைக் கொடுப்பது என இம்மாநில நேரடி நடவடிக்கைக் குழு முடிவு செய்து அனைத்து ஆசிரியர்கட்கும், எல்லா கிளைகளுக்கும் அறிவிக்கிறது.

சைக்கிள் அணி ஊர்வலம் சென்னை நகரில் நடத்துவதற்கு முதல் நாள் 28-12-69 இரவில் சென்னையில் பொதுக்குழுகூடி அடுத்த நேரடி நடவடிக்கை பற்றி முடிவு செய்வது என முடிவாற்றப்பட்டது.

சென்னை நகரில் நடைபெறும் ஊர்வலத்திற்கு எல்லா வட்டார நகரக்கிளைகளும் ஆசிரியப் பெருமக்கள் கலந்துகொள்ளும் வகையில் குறைந்தது ஒரு பஸ் வீதம் ஏற்பாடு செய்யும்படி கேட்டுக்கொள்வதென முடிவு செய்யப்பட்டது.

சைக்கிள் அணி வரும் வழிகளெல்லாம் நகரங்களில் கூட்டங்கள் நடத்தி கோரிக்கைகளை விளக்கம் செய்வது எனவும், சென்னை நகரில் தங்குவதற்கான ஏற்பாடுகள், உணவுவகை ஏற்பாடுகள், ஊர்வலம், பொதுக் கூட்ட ஏற்பாடுகள், வசதிகள் அனைத்தையும் சென்னை மாவட்டக்கிளை செய்யவேண்டுமாறும் கேட்டுக்கொள்ளப்பட்டது.

சென்னை நகரில் நடைபெறும் மாபெரும் சைக்கிள் ஊர்வலம் முன்னாள் தலைவர்களான திரு. வி. இராமசாமி, திரு. இர. இராமையா ஆகியோர் தலைமையில் நடைபெறும் எனவும். முன்னாள் மாநிலப் பொதுச் செயலாளர் திரு. வி. இராமுண்ணி அவர்கள் தலைமையில் முதலமைச்சரிடம் கோரிக்கைகளைக் கொடுப்பது எனவும் முடிவு செய்யப்பட்டது.

மூன்றாவது நேரடி நடவடிக்கையான சைக்கிள் அணி ஊர்வலம் சென்னை நகரில் நடத்தி முடிக்கும் வரை எல்லா மட்டங்களிலும் உள்ள கிளைக்கூட்டணிகளின் மாநாடுகள், வரவேற்பு நிகழ்ச்சிகள், பாராட்டு விழாக்கள் ஆகியவை நடத்துவது சம்மந்தமான எல்லா நிகழ்ச்சிகளையும் தள்ளிவைத்துவிட்டு, சைக்கிள் அணி ஊர்வலம் நடத்துவதுசம்மந்தமான பிரச்சாரம், ஆக்கப்பணிகள் ஆகியவற்றில் ஒருமுகமாக ஈடுபடவேண்டுமென கிளைகள் கேட்டுக்கொள்ளப்பட்டு தீர்மானம் செய்யப்பட்டது.

---

## அரசு அச்சகக் கோவை சங்கத்திற்கு தோழர் ரமணி தலைவராகத் தேர்வு

கோவை மாவட்டம் பெரியநாயக்கன்பாளையத்தில் இந்திய அரசுக்குச் சொந்தமான பெரிய அச்சகம் ஒன்று உள்ளது. அங்கு உள்ள அலுவலக ஊழியர்களுக்காகவும், தொழிலாளர்களுக்காகவும் இரு சங்கங்கள் உள்ளன. இவைகளுக்குத் தலைவராக தோழர் கே ரமணி எம்.பி. தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார்.

# மேற்கு வங்கத்திலும் சதிவேலைகள் ஆரம்பம்

## பங்களா காங்கிரசின் அவதூறுக்கு கம்யூனிஸ்ட் கட்சி [மார்க்ஸிஸ்ட்] பொலிட்பீரோ கண்டனம்

மேற்குவங்க நிலை குறித்து இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) பொலிட்பீரோ கீழ்வரும் அறிக்கையினை விடுத்துள்ளது.

ஐ. மு ஆட்சியின் கீழ் வங்கத்தில் உள்ள நிலைமைபற்றி பங்களா காங்கிரஸ் நிறைவேற்றியுள்ள தீர்மானத்தை இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) பொலிட்பீரோ (அரசியல் குழு) கண்டு அதிர்ச்சியுற்றுள்ளது. இத்தீர்மானத்தைப் பார்க்கும் ஐ. மு. எதிரிகள் அனைவரும் பேரானந்தம்கொள்வர். பிற்போக்காளர்களும் சுயநலமிகளும் இதனைக்கண்டு மகிழ்ச்சியடைவர்.

ஆனால் ஐ. மு அரசை ஆதரிக்கும் வங்கத்திலும் இந்தியாவெங்கிலுமுள்ள மக்களனைவரும் பங்களா காங்கிரஸ் நிறைவேற்றியுள்ள தீர்மானத்தைக்கண்டு வேதனையும், ஆத்திரமும்தான் கொள்வர்.

### பங்களா காங்கிரசின் அவதூறு

அவதூறு பொழிவதையே குறிக்கோளாகக் கொண்ட அந்தத் தீர்மானத்தில் உண்மைக்கு இடமில்லை என்பது தெளிவு. சட்டமும் ஒழுங்கும் சீர்குலைந்துவிட்டது என்பது முழுக்க முழுக்கப்பொய். 100-க்கு மேலானவர் கொல்லப்பட்டனர் என்றும், தொழிற்சாலைகளில் கெரோக்களினால் பெரும் நெருக்கடி ஏற்பட்டுள்ளதென்றும், பெண்களின் மான உணர்ச்சிக்குப் பேராபத்து ஏற்பட்டுள்ளது என்றும், கொலைகாரர்களின் மீது நடவடிக்கை எடுக்கவில்லையென்றும் கூறுவதெல்லாம் அப்பட்டமான பொய்கள்.

இத்தகைய தீர்மானம் நிறைவேற்றப்படுவதற்கு முன்பு ஐ. மு. இது குறித்து வாதிக்க பங்களா காங்கிரஸ் முன்வரவில்லை. தனிப்பட்டவையான பிரச்சினைகள் எதையும் எழுப்பவில்லை. சமீபத்தில் ஐ. மு வில் நடந்த விவாதத்தில் அதைப் பலப்படுத்தும் நோக்கத்துடன் எல்லோரும் ஒற்றுமையாக மக்களிடம் செல்வது என்று முடிவு எடுக்கப்பட்டது. இத்தகையதொரு சந்தர்ப்பத்தில்தான் ஐ. மு. அரசுக்கு எதிராக பங்களா காங்கிரஸ் வெறித்தனமாகப் பிரசாரத்தில் ஈடுபட்டுள்ளது.

1967 ல் காங்கிரஸ் கட்சியாலும், ஐ. மு. எதிரிகளாலும் இத்தகைய குற்றச்சாட்டுகள் கூறப்பட்டனவா? அந்த குற்றச்சாட்டுக்களை இன்றும் கூற முன் வந்துள்ளார்கள். அக்குற்றச்சாட்டுக்களை அன்றைக்கு நிராகரித்தது மட்டுமல்லாமல், அதற்கு முன்பு நடந்த இடைத் தேர்தலிலும், நகரசபைத் தேர்தல் உட்பட ஏனைய எல்லா தேர்தல்களிலும் அவர்களை நிராகரித்துள்ளனர் வங்க மக்கள்.

### ஐ. மு. அரசு செய்த உதவியை மறைக்கிறது

பங்களா காங்கிரஸ் நிறைவேற்றியுள்ள அரசியல் தீர்மானத்தில் பல்வேறு தொழில்களில் வேலை பார்க்கும் இலட்சோபலட்சத் தொழிலாளர்களும், கிராமங்களில் உள்ள நிலமில்லா ஏழை விவசாயிகளும், அரசாங்க ஊழியர்களும், ஆசிரியர்களும் ஐ. மு. அரசின் உதவியுடன் பல வெற்றிகளைப் பெற்றுள்ளனர் என்ற உண்மையைக் குறிப்பிடவில்லை. இவ்வாண்டு போனசுக்காக நடந்த போராட்டங்கள் ஐ. மு. அரசு இருந்த காரணத்தினாலே தங்களுடைய கோரிக்கைகளை வென்றெடுக்க முடிந்தது என்று குறிப்பிடவில்லை. மக்களின் ஜனநாயக உரிமைகள் பாதுகாக்கப்பட்டதையோ, சிறுபான்மையோருக்கு வேறு எங்கும் கிடைக்காத பாதுகாப்பு வங்கத்தில் அளிக்கப்படுகிறது என்பதையோ பல்வேறு துறைகளில் ஐ. மு திட்டம் எவ்வாறு அமுல் நடத்தப்படுகிறது என்பதையோ பங்களாக் காங்கிரசின் தீர்மானம் குறிப்பிடவில்லை மாறாக, கெரோக்களின் மூலமாக தொழிற்சாலைகளில் உற்பத்தி பாதிக்கப்பட்டுள்ளது என்பதைக் கூறி தொழிலாளி வர்க்கத்திற்கு எதிராக அவதூறு பொழிய முன் வந்துள்ளது.

தொழிற்துறையில் கஷ்டங்கள் ஏற்பட்டுள்ளதற்கான காரணங்கள் வேறானவையாகும். இவ்வாறு பங்களா காங்கிரஸ் தலைவர்கள் உண்மையிலேயே அதிருப்தியடைந்திருப்பது ஆச்சரியமாக உள்ளது. மேற்கு வங்கத்தில் சட்டமும், ஒழுங்கும் சீர்குலைந்துவிட்டது என்று கூற முன் வந்திருப்பதும் அதே சமயத்தில் அருகாமையில் உள்ள ஒரிசாவிலோ, பீகாரிலோ அல்லது பம்பாயில் சிவசேனை ஆடிய வெறியாட்டத்திலோ, அல்லது குஜராத் மாநிலத்தில் அகமதாபாத்தில் நடைபெற்ற இன நர வெறியாட்டத்திலோ அல்லது ஆந்திர நாட்டில் கடந்த 8 மாதகாலமாக நடைபெற்றுவரும் நரவெறித் தாண்டவத்திலோ, அல்லது அங்கு நடைபெற்றுவரும் தனித் தெலுங்கானா என்று அங்கு தலைவர்களால் நடத்தப்படும் கலவரங்களிலோ சட்டமும், ஒழுங்கும் குலைந்ததாக பங்களாக் காங்கிரஸ் பார்க்கவில்லை டெல்லியில் நடைபெற்ற காமன்வெல்த் மாநாட்டில் பெண்கள் ஆயிரக்கணக்கில் அவமானப்படுத்தப்பட்டதில் சட்டமும், ஒழுங்கும் சீர்குலைந்துள்ளது என்று காணவில்லை.

பங்களாக் காங்கிரஸ்காரர்களும், இன்னும் சில கட்சியினரும். வங்க உள்துறை இலாகாவையும் தொழிற்துறையையும் குறிப்பிட்டுத் தாக்குவதின்மூலமாக மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியைத் தனிமைப்படுத்தலாம் என்று எண்ணுகிறார்கள். இது எங்கு பேசமுடியும்? 1967-ல் எந்த நிலைமை உருவாக்கப்பட்டதோ அதே நிலைமைக்குத்தான் பங்களா காங்கிரஸ் இட்டுச் செல்லும்.

பங்களா காங்கிரஸ் தலைமையில் நடக்கும் ஏனைய கட்சிகள் மிகமிகப் பிற்போக்காளர்களின் சதிவேலைகளில் விழுந்துள்ளன பிற்போக்காளர்கள் புரியும் சதிவேலைக்கே ஊக்கமளிக்கிறார்கள் அதற்கும் இரையாகிறார்கள்.

### மக்களின் சார்பாகவே நம் கட்சி

முதலாளித்துவ நலன்களை எதிர்த்து ஐ. மு வின் நற்பெயரைப் பாதுகாத்து, மக்களின் சார்பாகவே நமது கட்சி நிற்கும் என்று நம் சார்பாகத் தெரிவித்துக் கொள்கிறோம். அதுவே மக்களுக்கு உகந்ததாக இருக்கும் என்று கருதுகிறது சுயநல நபர்களாலும், பிற்போக்காளர்களாலும் சட்டமும் ஒழுங்கும் சீர்குலைந்தது என்றுஎழுப்பப்படும் கூக்குரல், மக்களை மார்க்சிஸ்ட் கட்சிக்கு எதிராகத்தூண்டிவிட முடியாது.

ஜனநாயக ஆர்வமுள்ள அனைவரையும் ஐ. மு. உள்ள அனைவரையும் நம் கட்சிவேண்டிக்கொள்கிறது. ஐ. மு. அரசைப் பாதுகாக்க இக்கட்சிகள் ஒருங்கிணைந்து செயல்படவேண்டும் ஐ. மு. அரசைப் பாதுகாப்பதின் மூலம் அது மக்களுடைய கருவியாகச் செயல்படமுடியும்.

---

# வலது சாரிகளின் இரட்டை நாக்கு!

தமிழக அரசின் தொழிலாளர் கொள்கையை விமர்சித்த பின் தமிழ்நாடு வலதுசாரிகளின் ஜனசக்திஏடு கடைசிப் பக்கத்தில் கீழ்வருமாறு குறிப்பிட்டுள்ளது.

"இதே காலத்தில் மேற்கு வங்கத்தில் தேயிலைத்தோட்டத் தொழிலாளிகள் இடைக்கால நிவாரணமாக ரூ. 25 கூலி உயர்வு பெற்றனர். பஞ்சாலைத் தொழிலாளிகள் ரூ. 45 சம்பள உயர்வும் 20 சதம் போனசும் பெற்றனர். நசிந்துபோன சணல் தொழிலிலுங்கூட தொழிலாளிகள் ரூ. 40 சம்பள உயர்வு பெற்றனர். அங்கு மூடு விழாக்கள் நின்று விட்டன. ஏனெனில் மூடினால் அரசு எடுத்துக்கொள்ளும் என திட்டவட்டமாகக் கூறி விட்டார்கள்"

"இந்தச் செய்திகளை முதலாளித்துவப் பத்திரிகைகள் மூடி மறைத்துவிட்டு, கூட்டணியில் எழும் கொள்கைச் சச்சரவுகளை கொம்பும் சிம்பும் வைத்து எழுதி புழுதியை வாரி வீச முயற்சிக்கின்றன.இருந்தும் இந்தச் சாதனைகளை மறைக்க முடியவில்லை. இதுவரையில் மேற்கு வங்கத்தில் ஒன்றரை கோடித் தொழிலாளர்களுக்குச் சம்பள உயர்வு கிடைத்துள்ளது என மத்திய அமைச்சரே ஒப்புக்கொண்டு கூறியுள்ளார்."

—ஜனசக்தி, 19—10—69

இத்தகைய சாதனைகளை தமிழகத்தில் தி. மு. க. ஆட்சி சாதிக்கவில்லை; மேற்கு வங்கத்தில் ஐக்கிய முன்னணி ஆட்சி சாதித்துள்ளது என ஒப்புக்கொள்ளும் திருத்தல்வாத ஏடே! இதே மேற்கு வங்க அரசைக் கவிழ்க்க பங்களா காங்கிரஸ், பார்வர்டு பிளாக் ஆகிய கட்சிகளுடன் குட்டி முன்னணியாகச் நீங்களும் சேர்ந்துகொண்டு அவ்வரசைக் கவிழ்க்க குறும்புத்தனங்கள் புரிவதேன்? சட்டமும், அமைதியும் வங்கத்தில் இல்லைஎனக் காங்கிரஸ் கூக்குரலிட, அதற்கு 'ஆமாம்" என பங்களா காங்கிரஸ் ஒத்து ஊதிக்கொண்டு, ஐ. மு. அரசிற்கு எதிராக இயக்கம் நடத்த முன் வந்துள்ளதே; இந்த பங்களா காங்கிரசைத் தோளில் தூக்கிக்கொண்டு, "இதுதான் தேசபக்தக் குட்டிக் கூட்டணி" என்று துதிபாடுவது ஏன்? சட்டமும், அமைதியும் குலைந்து விட்டது என்று கூறுவது யாரங்கே? "இடைக்கால நிவாரணமாக ரூ.25ஐ" யாரிடமிருந்து பெற்றார்களோ, "ரூ. 45-சம்பள உயர்வாக பஞ்சாலைத் தொழிலாளிகள்" போராடி யாரிடமிருந்து பெற்றார்களோ, அதே பிண்டங்கள்தாமே சட்டம், அமைதி குலைந்து விட்டன எனக் கூக்குரலிடுகின்றன? அந்தப் பிற்போக்குக் கூக்குரலைத்தானே பங்களா காங்கிரஸ் எதிரொலிக்கிறது? இதனை மறுக்க முடியுமா? திருத்தல்வாதிகளே! உங்களின் குட்டிச் சகாக்களுடன் சேர்ந்துகொண்டு அங்கேயும் கூட்டணி அரசினைக் கவிழ்க்க முன்வந்திருப்பதேன்?

நீங்கள் வங்க அரசின் சாதனைகளைப் புகழ்வதில் நேர்மையிருக்குமானால், உங்களது வங்க சகாக்கள் அரசுக்கெதிராக சதி செய்ய முன் வந்திருப்பதின் காரணம் என்ன என்பதை விளக்குவீர்களா?

---

### சர்வோதய சங்கத்தில் பழிவாங்குதல்

திருப்பூர் காந்தீய சர்வோதய சங்க ஊழியர்கள், வேலை நீக்கம் செய்யப்பட்ட 25 வருட சர்வீசுள்ள தோழர் கே. என். சுப்ரமணியம் தலைமையில் இம் மாதம் முதல் வாரத்தில் 15 பேர்களின், உண்ணாவிரதம் நடந்தது. தமிழ் நாடு முழுதும் சர்வோதய சங்கத்தில் பணியாற்றும் 2500 தொண்டர்கள் 15000 நூற்காரர்கள் இவர்களுக்கு எவ்வித தொழிற்சங்க உரிமையும் கிடையாது. சங்கம் வைத்ததால் கண்ட இடங்களுக்கு மாற்றி பழிவாங்கி சங்கத்தை உடைத்துவிடுகிறார்கள். அந்த தோழர்களை உந்தி உயர்த்தும் முன்னோடியாக இவ்வுண்ணாவிரதம் உள்ளது.

போராட்டத்தை தொடர்ந்து ஒருவாரம் நடத்த முடிவு செய்து உள்ளது.

---

### மதுரை சிறப்பு அங்காடி சம்பள கோரிக்கை வெற்றி

மதுரை கூட்டுறவு சிறப்பு அங்காடி ஊழியர்கள் கடந்த மூன்று வருடமாக சம்பள உயர்வு இல்லாமல்தொடர்ந்து வேலை பார்த்து வந்தனர். தொழிலாளர்கள் சங்கம் மூலம் சம்பள உயர்வு கேட்டனர். நிர்வாகம் நஷ்டம் எனக்கூறி சம்பள உயர்வு கொடுக்கப் பிடிவாதமாக மறுத்து வந்தது தொழிலாளர்கள் வேறு வழி இல்லாமல் கடந்த 15 நாட்களுக்கு மேல் பகல் 1 மணிக்கு ஆர்ப்பாட்டம் நடத்திவந்தனர். பின்னால் ஆர்ப்பாட்டத்தின் பலனாக ஆகஸ்டு முதல் சம்பள உயர்வு நபர் ஒன்றுக்கு 8 ரூபாய் கொடுத்தது.

கூட்டுறவுத்துறை ஊழியர்களும் இதரதுறை ஊழியர்களும் ஆர்ப்பாட்டத்தில் கலந்துகொண்டு ஒத்துழைத்தனர்.

# மேற்கு வங்க பஞ்சாலைத் தொழிலாளருக்கு கூடுதல் சம்பளம்! கூடுதல் போனஸ்!

மேற்கு வங்க மாநிலத்தில் கடந்தவாரம் ஒரு முக்கியமான நிகழ்ச்சி நடந்திருக்கிறது. மேற்கு வங்கத்தில், தொழிலாளர் போராட்டங்களை நசுக்க போலீஸ் படையை ஏவ மறுக்கும் ஒரு ஐக்கிய முன்னணி அரசு இருக்கிறது. அது மட்டுமின்றி கொள்ளை லாப முதலாளிகளை எதிர்த்துதொழிலாளிவாக்கம் நடத்தும் போராட்டங்களை ஆதரிக்கும் ஒரு ஐக்கியமுன்னணி அரசு இருக்கிறது. எனவே அதைப் பயன்படுத்திக் கொண்டுள்ள தொழிலாளர்கள் கட்சி, சங்க வேறுபாடின்றி ஒற்றுமையாக தொடர்ந்து போராடுகிறார்கள்; ஒன்றின் பின்னொன்றாக அரும்பெரும் வெற்றிகளைப் பெற்று வருகிறார்கள்.

## பஞ்சாலைகளிலே வெற்றி முரசு

55 ஆயிரம் பஞ்சாலைத் தொழிலாளர்கள் 38 நாட்களாகத் தொடர்ந்து வேலை நிறுத்தம் செய்து, 8-10-69-ல் வெற்றிகரமாக முடித்தார்கள். மாநில ரீதியாக நடைபெற்ற போராட்டங்களில் இதுதான் நீண்டதொரு போராட்டமாகும்.

பஞ்சாலை முதலாளிகள் எப்படியும் இந்தப் போராட்டத்தை முறியடித்து விடுவதென்றும், எந்த வொரு உடன்பாட்டுக்கும் முடியாது என்றும் பிடிவாதமாக இருந்தார்கள். பிடிவாதத்தின் உச்சிக் கொம்புகளில இருநத அவர்கள், முடிவில் தொழிலாளி வர்க்கத்தின் ஒன்றுபட்ட வீரஞ்செறிந்த போராட்டத்தின முன்னே அடிபணிந்து அநேக முக்கியமான கோரிக்கைகளுக்கு இணங்க வேண்டியதாயிறறு.

தொழிலாளர் அமைச்சர் கிருஷ்ணபாதகோஷ் முன்பாக நடைபெற்ற சமரசப் பேச்சு வார்த்தையின் போது,

1. இடைக்கால சம்பள உயர்வாக மாதம் 20 ரூபாய் கிடைக்கும்.

2. போனஸ் 4 சதவீதமும், அத்துடன் 20 நாள்சம்பளமும் கிடைக்கும்.

3. பஞ்சப்படி இன்றைய நிலவரப்படிய இன்னும் ஒருவருடம் நீடிக்கும்.

4. நிரந்தரமான சம்பள விகிதங்களை நிர்ணயிக்க, இருதரப்பாளரும் சம்மதிக்கக்கூடிய ஒருவரைத் தலைவராகக் கொண்டு ஒரு சம்பள நிர்ணயக்குழுவை அரசாங்கம் நியமிக்கும்.

## பொதுஜன ஆதரவு

இது ஐக்கிய முன்னணியின் ஆட்சியின் கீழ் தொழிலாளர்கள் பெற்ற மாபெரும் 4-வது வெற்றியென்றும், இவ்வெற்றிக்காக அரசுத்தரப்பிலிருந்து தொழில் அமைச்சர் ஆற்றிய உதவிக்காக நன்றி தெரிவித்தும் மேற்குவங்க தொழிற் சங்க காங்கிரசின் பொதுச்செயலாளர் பேசினார்.

இந்தப் போராட்டத்துக்கு விவசாயிகள், வாலிபர்கள், மாணவர்கள், ஆசிரியர்கள், அரசாங்க ஊழியர்கள் மற்றும் பொதுமக்கள் அலையலையாக வந்து ஆதரவு அளித்தார்கள். மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் செந்தொண்டர் படையினர் இரவு பகலாகக் கண் விழித்து உதவினார்கள். எல்லாவற்றுக்கும் மேலாக ஆலை முதலாளிகளின் கொட்டத்தை அடக்குவதற்காக மேற்குவங்க முழுவதும் உழைப்பாளிமக்கள் பொது வேலை நிறுத்தம் செய்யவும் அர்தால் செய்யவும் தயாராகிவிட்டார்கள்.

போராடி வெற்றி பெற்ற தீரத் தொழிலாளர்களுக்கும் அடம் பிடித்த முதலாளிகளை சமரசப் பேச்சில் கலந்து கொள்ளுமாறு நிர்பந்தித்த ஐக்கிய முன்னணி அரசுக்கும் மேற்குவங்கத் தொழிலாளர் சங்கங்கள் வாழ்த்துக்கள் அனுப்பின.

## மெட்டல் பாக்ஸில் வெற்றி

கல்கத்தாவில் மெட்டல்

(5-ஆம் பத்தி பார்க்க)

(3-ஆம் பத்தி தொடர்ச்சி)

பாக்ஸ் கம்பெனியில் வேலை பார்த்த 4500 தொழிலாளர்கள் 54நாட்களாகதொடர்ந்து வேலை நிறுத்தம் செய்தார்கள். கடைசியாக 8-10-69-ல் தொழிலாளர் அமைச்சர் கிருஷ்ணபாதகோஷ் முன்னிலையில் ஓர் உடன்பாடு செய்து கொள்ளப்பட்டது.

அதன்படி தொழிலாளர்களும் குமாஸ்தாக்களும் 10.7 சதவிகித போனசுடன் 8 நாள் சம்பளமும் போனசாகப் பெறுவார்கள் அல்லது 110 ரூபாய் பெறுவார்கள்

# பஞ்சாலை அரங்க தோழர்களுக்கு ஒரு முக்கிய அறிவிப்பு.

## நவம்பர் 3–ஆம் நாள் மதுரையில் கூட்டம்

தோழர்களே,

வருகிற நவம்பர் 3 ஆம் தேதி திங்கட்கிழமையன்று பஞ்சாலை அரங்கத்தில் வேலை செய்யும் முக்கிய கட்சிஊழியர்களின் கூட்டம் மதுரையில் நடைபெறும். அந்த கூட்டத்தில் தோழர்கள் பி. ராமமூர்த்தி, கே. ரமணி, உமாநாத் முதலியவர்கள் கலந்து கொள்வார்கள்.

இரண்டாவது பஞ்சாலை சம்பள போர்டின் சிபாரிசுகளை அமுல்படுத்துவதாகச் சொல்லி, கோவையில் ஐ. என். டி. யு. ஸி., எச் எம். எஸ்., தி. மு. க. மற்றும் சில சங்கங்கள் சேர்ந்து தென் இந்திய மில் முதலாளிகள் சங்கத்துடன் ஓர் ஒப்பந்தம் செய்துள்ளன. தொழிலாளர்களின் நலன்களுக்கு பாதகமான பல ஷரத்துக்களைக் கொண்ட அந்த ஒப்பந்தத்தை மற்ற இடங்களுக்கும்விஸ்தரிக்க முதலாளிகளும் அந்த தொழிற்சங்கத் தலைவர்களும் முயற்சிக்கிறார்கள். நாம் சம்பளபோர்டு சிபாரிசுகளையும் மேற்படி ஒப்பந்தத்தையும் முழுமூச்சுடன் எதிர்க்கிறோம். சம்பள உயர்வுக்கும் பஞ்சப்படி உயர்வுக்கும் மற்றும் பல முக்கிய கோரிக்கைகளுக்குமாக தமிழகம் தழுவிய இயக்கமும் போராட்டமும் நடத்த விரும்புகிறோம்.

மூடிய மில்களைத் திறக்கிறோம் என்ற பெயரால்,தமிழக அரசும் முதலாளிகளும் தொழிலாளர்களின் பல உரிமைகளைப் பறிக்கும் நடவடிக்கைகளை எடுத்து வருகின்றனர்.

இவை பற்றியெல்லாம் பரிசீலித்து நம் எதிர்கால திட்டத்தை உருவாக்கிக்கொள்ளத்தான மேற்படி கூட்டம் கூட்டப்பட்டுள்ளது. கூட்டத்துக்கு வரும் பிரதிநிதிகள் நியமனம் சம்பந்தமாக மா. க. அலுவலகத்திலிருந்து ஜில்லா கமிட்டிகளுக்கு சர்க்குலர் அனுப்பப்பட்டுள்ளது. ஜில்லா கமிட்டிகள் அந்த அடிப்படையில் பிரதிநிதிகளை நியமித்து நவம்பர் 3-ஆம் தேதி காலை 9 மணிக்கு மதுரை பஞ்சாலைத் தொழிற்சங்க அலுவலகத்தில் நடைபெறும் மேற்படி கூட்டத்தில் கலந்துகொள்வதை உத்தரவாதப் படுத்த வேண்டுகிறோம்.

வரக்கூடிய பிரதிநிதிகளில், நவம்பர் 2-ல் நடைபெறும் பி. ஆர். மணி விழாவில் கலந்துகொள்கிறவர்களிருந்தால், அவர்கள் 3-ஆம் தேதியும் தங்கியிருந்து போவதற்கான தயாரிப்புகளுடன் வரும்படி கேட்டுக்கொள்கிறோம்.

மதுரை, மா க செயற்குழு.

24—10—69

# மதுரைப் பல்கலைக்கழகத் துணைத் தலைவரை மாணவர் சங்கத் தலைவர்கள் சந்தித்து முறையீடு

தமிழக மாணவர் சங்கத்தின் சார்பாக, அதன் உதவிச் செயலாளர் இரா. நாராயணன் தலைமையில் மூவர் கொண்ட குழு மதுரைப் பல்கலைக் கழகத் துணைத்தலைவர் திரு. தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் அவர்களை 17—10—69-ஆம் நாள் மாலை 5 மணிக்கு சந்தித்து கீழ்க்காணும் விண்ணப்பத்தை கொடுத்து அதுபற்றி விளக்கிப்பேசினர்.

'தமிழக மாணவர் சங்கத்தின் சார்பாளர்களாகிய நாங்கள் கீழ்க்காணும் குறிப்புக்களை தங்களது கவனத்திற்குக் கொணர்கிறோம்; சுமுகமான தீர்வுகளைக் காணத் தங்களை வேண்டுகிறோம்.

மதுரை மருத்துவக் கல்லூரியைச் சேர்ந்த பி. பார்மஸி மாணவர்களின் உண்ணாவிரத அறப்போர், உத்தமபாளையம் H. A. K. R. கல்லூரி மாணவர்களது போராட்டம் ஆகியவைகளுக்கு ஒரு சமாதானபூர்வமான தீர்வு காண்பது, தற்போதைய உடனடிப் பிரச்சினைகளாகும்.

1) பி. பார்மஸி மாணவர்களின் கோரிக்கைகள் நியாயமானவை. தங்களது தலையீடு இப்பிரச்சினையில் ஒரு சாதகமான தீர்வை ஏற்படுத்தும். பிரச்சினைகளைத் 'தமிழ்நாடு அரசுக்கு' பரிந்துரை செய்து தமிழக அரசு தேவையான உறுதிகளை அளிக்குமாறும் உங்களை வேண்டுகிறோம். மாணவர்களது கோரிக்கைப் பட்டியல் இதனுடன் இணைக்கப்பட்டுள்ளது. (சென்றஇதழ் தீக்கதிரில் வெளியாயிற்று).

(2) உத்தமபாளையம் கல்லூரியை மூடியது அநீதியானதும் தேவையற்றதுமாகும். ஒரு மாணவரைப் (கல்லூரி மாணவர் தலைவர்) பழிவாங்கிய நிகழ்ச்சியே அங்குள்ள பிரச்சினை; சிறிய இப்பிரச்சினை கல்லூரி நிர்வாகத்தினரது பொறுப்பற்ற செயல்களால் சிக்கலாக்கப் பெற்றுள்ளது.

தாங்கள் இப்பிரச்சினையில் தலையிட்டு, பழிவாங்கப்பட்ட மாணவரை மீண்டும் கல்லூரியில் சேர்த்து, பிரச்சினையை சுமுகமாகத் தீர்த்துவைக்கும்படி வேண்டுகிறோம்.

இச்சந்தர்ப்பத்தில் கலை, பொறியியல் கல்லூரிகளில் புகுத்தப்பெற்றுள்ள 'செமஸ்டர் முறை' பற்றிய பிரச்சினைகளையும் தங்களது கவனத்துக்கு கொண்டு வருகிறோம்.

முக்கிய பாடங்களை இறுதியாண்டில் எழுத மாணவர்களை அனுமதித்த பழைய தேர்வு முறை நல்ல முறையிலேயே இயங்கி வந்தது. அப்படியொரு நல்ல சூழ்நிலையில், பெரும்பான்மை மாணவர்களைக் கல்லூரிகளிலிருந்து விரட்டும் தன்மைபடைத்த, புதிய 'செமஸ்டர் முறை' கல்லூரிகளில் புகுத்தப்பட்டுள்ளதை எங்களால் புரிந்துகொள்ள முடியவில்லை. செமஸ்டர் முறை மாணவர்களது கல்விக் காலத்தை அதிகமாக்குகிறது; பெற்றோர்களுக்கு பெருஞ்சுமையாக அமைவதோடு மட்டுமல்லாமல, மாணவர்களை மனனம் செய்யும இயந்திரங்களாக்குகிறது. எந்தவொரு வகையிலும, இம்முறை கல்வியின் தரத்தை உயர்த்துவதாயில்லை.

நிர்வாகத்தினர் சிலரது விருப்பு, வெறுப்புகளுக்கு ஆட்பட்ட மாணவர்களை கல்லூரிகளிலிருந்து வெளியேற்றும் தன்மைபடைக்க இப்புதிய முறையை, கொல்லைப்புற வழியாகப்புகுக்கப்படுவதை நிறுத்துமாறு நாங்கள் தங்களை வேண்டுகிறோம். இம்முறை ஏற்கனவே பல அதிருப்திகளுக்கும் சீர்குலைவுகளுக்கும் கல்வி நிலையங்களை ஆட்படுத்தியுள்ளது. மேலே கூறப்பட்ட 'செமஸ்டர் முறையை மதுரைப் பல்கலைக்கழகத்தின் எல்லாக் கல்லூரிகளிலிருந்தும் முற்றிலுமாக நீக்கி விடுமாறு தங்களை மீண்டும் பணிவுடன் வேண்டிக்கொள்கிறோம்."

இப் பிரச்சினைகள்பற்றி மாணவர் சங்கத் தலைவர்கள் பல்கலைக்கழகத் துணைத் தலைவருடன் விவாதம் செய்தனர். துணைத் தலைவர் அவன செய்வதாகக் கூறியுள்ளார்.

## பாவலர் வரதராஜன் குழுவினர் இன்னிசை நிகழ்ச்சிகள்

★

அக்.24-ம் நாள் ராமேஸ்வரம்
25 ,, பரமகுடி
26 ,, இராஜபாளையம்
27 ,, சேத்தூர்
28 ,, மதுரை தாலுகா
29 ,, மதுரை தாலுகா
30 ,, திண்டுக்கல்
31 ,, திண்டுக்கல்

நவம். 1-ம் நாள் திண்டுக்கல்

2 ,, மதுரை

P.R. மணிவிழா

# தோட்டத் தொழிலாளர்களின் உரிமைப் போராட்டம்

## போலீஸாரின் அடக்குமுறை பாணங்கள்

கேரளக் கூட்டணி அரசு தோட்டத் தொழிலாளர்களின் கூலியை அதிகரித்து அதை அரசு ரப்பர் தோட்டங்களில் அமுல் செய்தது. தொழிலாளர்களின் போராட்டம் கேரளாவிலுள்ள தனியார் தோட்டங்களிலும் அதே கூலியை அமுலுக்குக் கொண்டு வரச் செய்தது.

கேரளாவில் தோட்டத் தொழிலாளர்களுக்குக் கிடைக்கும் அதிகரித்த கூலி தமிழகத்திலும் வழங்கப்படவேண்டுமென கன்னியாகுமரி மாவட்ட தோட்டத் தொழிலாளர் சங்கம் போராட்டம் நடத்தியது. அதன் விளைவாக தொழிற் சங்க பிரதிநிதிகளுக்கும், மாவட்டத்திலுள்ள இருபத்திரெண்டு பெரிய தோட்ட முதலாளிகளுக்குமிடையே பேச்சு வார்த்தை நடந்தது. இந்தப் பேச்சுவார்த்தையில கன்னியாகுமரி மாவட்ட தோட்ட உடமையாளர்களின் சங்கமும் கலந்து கொண்டது. கேரளாவிலுள்ள கூலி உயர்வைக் கன்னியாகுமரி மாவட்டத்திலும் அமுல் நடத்த ஒத்துக்கொண்டு ஒப்பந்தம் கையெழுத்தானது. அந்த ஒப்பந்தத்தின் அடிப்படையில் மாவட்டத்திலுள்ள பெரும்பாண்மையான தனியார் தோட்டங்களில் அமுல் செய்யப்பட்டுள்ளது. அதனடிப்படையில் தனியார் தோட்டங்களில், பால வெட்டும் தொழிலாளிக்கு ரூ. 4-75-ம், காட்டு வேலை தொழிலாளிக்கு ரூ. 3-75-ம் கூலியாக இன்று கொடுக்கப்படுகிறது.

### அரசு தொழிலாளிக்கு குறை சம்பளம்

அதிகரித்தக் கூலி கோரி நடை பெற்ற பேச்சுவார்த்தைகளில் தமிழ்நாடு அரசு ரப்பர் தோட்டத்தின் பிரதிநிதிகளும் கலந்து கொண்டார்களென்பதுகுறிப்பிடத் தக்கது. ஆனால் அந்த ஒப்பந்தம் அரசு ரப்பர் தோட்டத்தில் அமுல் நடத்தப்படவில்லை. தனியார் தோட்டங்களில் பால்வெட்டும் தொழிலாளி ரூ. 4-15 பெறும் போது அரசுத் தோட்டத்தில் பால்வெட்டும் தொழிலாளிக்கு கிடைப்பது ரூபாய் 3-17 மட்டுமே. ஒரு காட்டு வேலைத் தொழிலாளி தனியார் தோட்டத்தில் ரூ 3-75 பெறும் போது, அரசு ரப்பர் தோட்டத்தில் அதே தொழிலாளிக்கு கிடைப்பது ரூ. 2-77 தான். தனியார் தோட்டத் தொழிலாளிக்கும், அரசுத் தோட்டத் தொழிலாளிக்கும் கிடைக்கும் தினச் சம்பளத்தின் வித்தியாசம் 1 ரூபாய் மாதம் ரூ. 30 வித்தியாசம்

அரசு ரப்பர் தோட்டத்திற்கு 1958ஆம் ஆண்டு பட்ஜட் ஒதுக்கப்பட்டது. அந்த ஷெட்யூலில் ஒதுக்கப்பட்ட நிதி இன்று தொழிலாளர்களுக்கு சம்பளம் வழங்கப்போதுமானதல்ல. இதன் விளைவாக தொழிலாளர்களை பெருமளவில் வேலையிலிருந்து பிரித்து விட நேரிட்டுள்ளது. அது மட்டுமின்றி காட்டு வேலைகள் காண்டிராக்டர்களின் கீழ் ஒப்படைக்கப்படுகின்றன. இதனால் மஸ்டர் ரோலில் பெயர் பதிவு செய்யப்பட்டுள்ள காட்டுவேலை தொழிலாளர்களுக்கு வேலை கிடைக்க முடியாத நிலை உள்ளது.

### மகஜரினால் பயனில்லை

இத்தகைய அவல நிலையை அகற்றவும், புதிய ஒப்பந்தத்தின் அடிப்படையில் தனியார் தோட்டங்களில் கிடைக்கும் சம்பளம் கோரியும் அரசுக்கு பல மகஜர்கள் தொழிலாளர்களின் சார்பில் அனுப்பபியாகி விட்டது. 22—8—69 அன்று அமைச்சர்கள் மட்டத்தில் தேவையான நடவடிக்கை யெடுக்கக்கோரி வேண்டு கோளும் விடுத்தாயிற்று. அரசுடன் நடத்திய பேச்சு வார்த்தைகளும், அனுப்பிய மகஜர்களும்பயனளிக்கவில்லை. அரசு ரப்பர் தோட்ட அதிகாரிகள் இது விஷயத்தில் தாங்கள் தன்னிச்சையாக எதுவும் செய்யலாகாது. கூலியை அதிகரிப்பதற்கான அதிகாரம் எங்களுக்கு இல்லை, அரசின் மேல்மட்டத்திலிருந்து உத்திரவு கிடைக்க வேண்டுமென்கிறார்கள். ஆனால் தமிழக அரசோ மௌனம் சாதிக்கிறது.

### வேலை நிறுத்தம்

எனவே அரசு ரப்பர் தோட்டத் தொழிலாளர்கள் அக்டோபர் 16-ஆம் தேதி முதல் வேலை நிறுத்தம் செய்ய நிர்ப்பந்திக்கப்பட்டு, வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டுள்ளார்கள்.

தொழிலாளர்கள் தங்களுடைய உரிமைக்காக போராடும்போது சட்டமும், அமைதியும் உறுதியாக நிலை நாட்டப்படும் என தமிழக அரசு கூறுகிறது. சட்டத்தையும் அமைதியையும் காப்பதே தமிழ்நாடு அரசின் தலையாய கடமை என்கிறது அரசு. ஆனால் முதலாளி சட்டத்தை மீறும்போது தமிழ்நாடு அரசு கண்களை மூடிக்கொள்கிறது.

அரசு தோட்டத்தில் சட்டம் புறக்கணிக்கப்படுகிறது. தொழிலாளர்களுக்குக் கூலி உயர்வு வழங்கப்படவில்லை இந்த அவலநிலை தனியார் தோட்ட முதலாளிகளை தொழிலாளி விரோத நடவடிக்கைக்கு தூண்டுகிறது. தொழிற்சங்க தலைவர்களைக் கொலைசெய்ய தோட்ட முதலாளிகள் சதி செய்கிறார்கள். முதலாளிகளின் இச்செய்கைகளுக்கு போலீசும் துணை நிற்கிறது. அரசு நக்சல்பாரி பூச்சாண்டி காட்டுகிறது.

### சங்கச் செயலரை கொலை செய்ய சதி

கன்னியாகுமரி மாவட்டத்திலுள்ள பயோனியர் வாளையத்துவயல் தோட்ட நிர்வாகம் சங்கத்தின் துணைச்செயலாளரை கொலை செய்ய சதி செய்தது. 20—9—69 அன்று இரவு 10 மணியளவில் நம் சங்க துணைச்செயலாளர் தடிக்காரன் கோணத்திலிருந்து நாகர்கோவிலுக்கு 'லெனின்' என்ற லாரியில் வந்துகொண்டிருந்தார். பயோனியர் வாளையத்து வயல் தோட்ட நிர்வாகி முத்தையாபிள்ளை ஒரு ஜீப் காரில் குண்டர்களை ஏற்றிக்கொண்டு நாகர்கோவில் எல்லையிலுள்ள புத்தேரி என்னுமிடத்தில கீழேயிறங்குமாறு நிர்பந்தித்தனர். லாரியிலிருந்த தொழிலாளர்களின் துணிவால் சங்கத் துணைச்செயலாளர் கிருஷ்ணன்கோவில் போலீஸ் நிலையத்தில் சென்று இறங்கினர். பின்னர் அங்கிருந்து நாகர்கோவிலுள்ள சங்க அலுவலகத்திற்கு வந்து சேர்ந்தார்.

### சதி அம்பலம்

இதுமட்டுமின்றி, தோட்டத்திலுள்ள முதலாளி பங்களாவிற்கு இரவு நேரத்தில் பேச வருமாறு நம் சங்கப் பொதுச் செயலாளருக்கு அதேதோட்ட நிர்வாகம் அழைப்புக் கொடுத்தது. இவைகளிலிருந்து முதலாளியின் சதித் திட்டங்கள் அம்பலமாயிற்று.

பயோனியர் வாளையத்து வயல் தோட்ட நிர்வாகத்தையும், அதன் நிர்வாகி முத்தையா பிள்ளையையும் குறித்து போலீஸிற்கு புகார் கொடுக்கப்பட்டது.மாவட்டப் போலீஸ் அதிகாரியுடன் சங்க தலைவர் தோழர் ஜே. ஹேமச்சந்திரன், பொதுச் செயலாளர் தோழர் பெருமாள் ஆகியோர் சதிச் சம்பவங்களை விளக்கி நடவடிக்கையெடுக்க வேண்டினார்கள். இதுவரையிலும் எவ்வித நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை.

புதிய ஒப்பந்தம் அனுசரித்த சம்பளம் கோரி ஒப்பந்தம் அமுல் நடத்தப்படாத தோட்டங்களிலுள்ள தொழிலாளர்கள் போராடும் போது, தோட்ட முதலாளிகள் குண்டர்களை ஏவி கொடுமைகள் பல புரியும்போது தோட்ட முதலாளிகளின் பணமும், விருந்துபசாரங்களும் போலீஸின் கண்களை மூடிக்கொள்ளச் செய்கிறது போலீஸ் கண்களை மூடிக்கொண்டாலும் பரவாயில்லை. ஆனால் சங்க ஊழியர்கள் மீதும், தலைவர்கள் மீதும் பொய் வழக்குத் தொடரப்பட்டுள்ளது

### போலீஸ்துறை மாறவில்லை

தமிழ்நாடு அரசு தொழிலாளர் அரசு என்று பிரம்மாதமாகக் கூறப்படுகிறது. ஆனால் அரசின நடவடிக்கைகள் தொழிலாளி விரோதமாகவே இருந்து வருகிறது. அரசின் போலீஸ்துறை என்றும் போல் இன்றும் இருந்து வருகிறது.

தமிழக அரசின்கீழ் பொதுத் துறை நிறுவனங்கள் தனியார் நிறுவனங்களுக்கு முன்னோடியாக இருக்கவில்லை. தனியார் தோட்டங்களில் தொழிலாளர்களுக்கு வழங்கப்படும் கூலியை கூட அரசுத் தோட்டத்தில் தொழிலாளர்களுக்குகொடுக்க தமிழக அரசு விரும்பவில்லை.

அரசு ரப்பர் தோட்டம் தொழிலாளர்கள் வேலை நிறுத்தத்திற்கு ஆதரவாகவும், தமிழக அரசின் தொழிலாளி விரோத போக்கினை கண்டிக்கும் முகமாகவும் அனைத்து தோட்டத் தொழிலாளர்களும் அக்டோபர் 16-ல் ஒருநாள் வேலை நிறுத்தம் செய்தனர்.

வேலை நிறுத்தப் போராட்டத்தில் மாவட்டத்திலுள்ள 62-க்குமதிகமான தோட்டங்களிலுள்ள 3000-க்குமதிகமான தொழிலாளர்கள் பங்கெடுத்தனர் மாவட்டத்தின் பல பாகங்களிலுமிருந்து தோட்டத் தொழிலாளர்கள் 16 லாரிகளில் நாகர்கோவில் வந்தடைந்தனர்.

### செங்கொடியேந்தி ஊர்வலம்

செங்கொடியேந்தி தொழிலாளர் படை ஊர்வலமாக புறப்பட்டது. ஊர்வலத்தில் 500-க்கு அதிகமான பெண் தொழிலாளர்கள் பங்கெடுத்தனர். ஊர்வலத்தின்போது தமிழக அரசே! நீ தொழிலாளி அரசா? முதலாளி அரசா? தொழிலாளி அரசு என்றால் அரசு தோட்டத்தில் தொழிலாளர்களுக்கு ஊதிய உயர்வு கொடு! தொழிலாளி அரசு என்றால் சட்டத்தை மீறும் முதலாளி மீது நடவடிக்கையெடு! என்பன போன்ற கோஷங்கள் எழுப்பப்பட்டன.

ஊர்வலம் நகர்மன்ற திடலை வந்தடைந்தது. அங்கு நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் தோழர் ஆர். உமாநாத் எம். பி. உரையாற்றினார்.

---

## திருச்செங்கோடு நகரசுத்தி தொழிலாளர் போராட்டம்

திருச்செங்கோடு நகரசுத்தி தொழிலாளர்கள் தங்களுடைய குறைந்தபட்சக் கோரிக்கைகளைப்பெற கிளர்ச்சி செய்து வருகிறார்கள்.

தி. மு. கழகத்தைச்சேர்ந்த நகராட்சித் தலைவர் வெறும் வாக்குறுதிகளை அளித்துக் கொண்டேயிருக்கிறாரே தவிர, ஒரு நன்மையும் செய்யவில்லை. நகராட்சி ஆணையாளரோ, கோரிக்கைகள் கிடைக்கக் கிளர்ச்சி செய்துவரும் செங்கொடிச்சங்கத்தை நசுக்க, பல வழிகளிலும் முயன்று வருகிறார்.

அடிக்கடி காரணமின்றி தாற்காலிக வேலை நீக்கம் செய்கிறார்கள். இது பற்றி அதிகாரிகளைக் கேட்டால் "செங்கொடிச் சங்கத்தை விட்டு விலகிவிடு, வேண்டிய சலுகைகளைத் தருகிறோம்," எனக்கூறி, சங்கத்தை உடைக்க முனைகிறார்கள். மொத்தம் உள்ள 110 தொழிலாளர்களில் 80 பேர் செங்கொடிச் சங்கத்தில் இருக்கிறார்கள் 30 பேர் தி. மு. க. சங்கத்தில் இருக்கிறார்கள். கோரிக்கைகளுக்காகப் போராடும் செங்கொடிச்சங்கத்தை உடைக்கவே நகராட்சி ஆணையாளரும் தலைவரும் முயல்கிறார்கள்.

---

## கிண்டி தொழிற் பேட்டையில் தொழிலாளர் குமுறல்

கிண்டி தொழிற் பேட்டையிலுள்ள அனைத்துத் தொழிற் சங்கங்கள் சார்பில் தொழிற் பேட்டைகள் பொது தொழிலாளர்கள் சங்க பிரதி நிதிகள் தலைமையில் பொரியல் பட்டறை ஊதியக் குழுவில் தொழிற் சங்க பிரதிநிதிகள் கூறிய சிபார்சை அமுல்படுத்த கோரியும், சட்டவிரோத கதவடைப்புகளை கண்டித்தும், மாநில அரசு சிறு தொழில் நிறுவனத்தில் பணியாற்றும் தொழிலாளர்களின் கோரிக்கைகளை வலியுறுத்தியும் மாபெரும் ஊர்வலம் தோழர் எஸ். பழநி தலைமையில் இம்மாதம் முதல் வாரத்தில் நடந்தது.

இதில் தோழர்கள் வி. பி. சிந்தன், கே. எம். அரிபட், எஸ். கிருஷ்ணமூர்த்தி, சி. பி. தாமோதரன் ஆகியோர் கலந்துகொண்டனர்.

கிண்டி தொழிற் பேட்டையிள்ள அம்கோ எஞ்ஜினியரிங் கார்பரேஷன், வி. கே. இஞ்ஜீனியரிங் ஆகிய தொழிற்சாலைகள் கதவடைப்பு செய்யப்பட்டும், வேலை நீக்கம் செய்யப்பட்டும், இதனால் சுமார் 500க்கு மேற்பட்ட தொழிலாளிகள் பாதிக்கப்பட்டு இரண்டு மாதங்கள் ஆகியும் பிரச்னை முடியாமல் இருக்கிறதை சுட்டிக் காட்டுவதுடன் உடன் அரசு தலையிட்டு மேற்படி தொழிற்சாலைகளை திறக்க நடவடிக்கை மேற்கொள்ள வேண்டுமாய் கேட்டுக்கொண்டும்.

பிராவிடென்ட், ஈ. எஸ். ஐ. சி. பணம் தொழிலாளர்களிடம் வசூல் செய்தும் முதலாளிகள் கட்டாமல் சொந்த செலவு செய்வதும், அதனால் தொழிலாளர்கள் சலுகை பெற இடலாமல் இருப்பதால் முதலாளிகள் மீது கிரிமினல் நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டுமென இக்கூட்டம் தமிழ்நாடு அரசை கேட்டுக்கொள்கிறது.

இஞ்ஜினீயரிங் ஊதியக் குழு சிபாரசை தொழிற்சங்கங்கள் கூறிய யோசனைப்படி மாநில அரசு நிறுவனங்களில் முன் மாதிரியாக அமுல் நடத்தவும், நடவடிக்கை மேற்கொள்ள தமிழ்நாடு அரசை இக்கூட்டம் கேட்டுக்கொண்டு தீர்மானம் நிறைவேற்றியது.

தொழிற் தகராறுகளில் தேவையற்ற போலீஸ் தலையீடுகள் கூடாது என்றும், சென்னை நகர போலீஸ் சட்டம் செக்சன் 14 அவசியமற்றமுறையில் உபயோகப்படுத்தப்படுவதை நிறுத்த இக்கூட்டம் அரசினரை கேட்டுக்கொண்டு தீர்மானம் நிறைவேற்றியது

மற்றும் குடிநீர் பிரச்னை பற்றியும் தமிழக அரசு போக்குவரத்து ஊழியர்களின் கோரிக்கைகளை அமுல்படுத்தவும், சுமார் 800 தொழிலாளர்கள் மீது எடுத்துள்ள நடவடிக்கைகளை வாபஸ் பெறக் கோரியும் இக்கூட்டம் தமிழக அரசை கேட்டுக்கொண்டு தீர்மானம் நிறைவேற்றியது.

# கேரள மக்களுக்கு திருத்தல்

## காங்கிரசின் ஏவலாட்களாக செயல்படும் இழிநிலை

**கேரளத்திலும், மேற்குவங்கத்திலும் உள்ள நிலைமை பற்றி, இந்தியக் கம்யூனிஸ்ட்கட்சி (மார்க்ஸிஸ்ட்) பொலிட்பீரோ கூட்டம் 13-10-69-ல் கல்கத்தாவில் நடைபெற்றபோது நிறைவேற்றிய தீர்மானம் வருமாறு:—**

இந்திய நாட்டின் மக்களும் ஜனநாயக சக்திகளும்-குறிப்பாக கேரளத்திலும் மேற்கு வங்கத்திலும் உள்ள மக்களும், ஜனநாயக சக்திகளும், முதலாளித்துவ-நிலப்பிரபுத்துவ சக்திகளுக்கு எதிராக நடத்தி வரும் போராட்டத்தில், அவர்கள் முன்னால் எதிர்ப்பட்டுள்ள புதிய அபாயங்கள் குறித்து, இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் (மார்க்ஸிஸ்ட்) பொலிட்பீரோ, அவர்களுடைய கவனத்திற்குக் கொண்டு வருகிறது

கேரளத்தில் உடைமை வர்க்கங்களுக்கு எதிராகவும், காங்கிரஸின் பெரும் பூர்ஷ்வா - நிலப்பிரத்துவக் கொள்கைகளுக்கு எதிராகவும் சகல ஜனநாயக சக்திகளும் ஒன்று சேர்ந்து நிற்க வேண்டிய சமயத்தில் - கேரள ஐக்கிய முன்னணி அமைச்சரவை சீர்குலைந்து கிடக்கிறது; தகர்ந்து விட்டது; ஐக்கிய முன்னணிக் கட்சிகள் முடிவில்லாத சண்டையில் மூழ்கிக்கிடக்கின்றன. முஸ்லீம் லீகும் திருத்தல்வாதிகளும் மற்றுமுள்ள கட்சிகளும் பொது மக்களுக்கு ஆற்ற வேண்டிய தமது அடிப்படை கடமையை வேண்டுமென்றே புறக்கணித்து விட்டு, காங்கிரசுடனும் கேரள காங்கிரசுடனும் கைகோர்த்துக் கொண்டு, ஐக்கிய முன்னணி அமைச்சரவையை லஞ்ச ஊழல் அமைச்சரவை என்று குற்றம் சாட்ட முனைந்திருக்கிறார்கள். இப்பொழுது இந்தக் கட்சியின் ஐக்கிய முன்னணியை விட்டு ஓடிப்போகப் போவதாக பகிரங்கமாகப் பயமுறுத்தியுள்ளார்கள்.

ஐக்கிய முன்னணியிலுள்ள ஏனைய கட்சிகளின் சில அமைச்சர்களுக்கு எதிராக ஊழல் குற்றச்சாட்டுகள் உள்ளதால் இவற்றைப் பற்றியெல்லாம், முதலில் இணைப்புக் குழுவில் விவாதிக்க வேண்டுமென்று எங்கள் கட்சி மீண்டும் மீண்டும் எடுத்துக் கூறியது. அதன் மீது மேற்கொண்டு நடவடிக்கை எடுப்பதற்கு முன்னால் ஐக்கிய முன்னணியின் துணைக் குழு கூடி, இந்தக் குற்றச் சாட்டுகளெல்லாம் உண்மையானதுதானா என்று முதலில் ஆராய வேண்டும் என்று கூறினோம். ஆனால் இந்தக் கட்சிகள் ஐக்கிய முன்னணியைக் குழிதோண்டிப் புதைத்து விட்டு காங்கிரசுடன் ஒரு புதிய நட்புறவை ஏற்படுத்திக் கொள்ளவே விரும்புகின்றன. ஐக்கிய முன்னணிக்கு விரோதமாக நடத்தும் பகிரங்கக் கலகமும், காங்கிரஸ் கட்சியுடனும், கேரளக் காங்கிரசுடனும் இந்த நான்கு கட்சிகளும் மான வெட்கமில்லாமல் கைகோர்த்துக்கொண்டு திரிவதும், கேரள மக்களைக் காட்டிக்கொடுக்கும் செயலேயாகும். நிகழ்ச்சிகளின் வளர்ச்சிப் போக்கு இப்படி இருப்பது குறித்து நாங்கள் வியப்படையவில்லை. நீண்டகால ஐக்கிய முன்னணி அமைச்சரவையைக் கவிழ்க்கவும், எங்களுடைய கட்சியைத் தவிர்த்து மற்ற கட்சிகளைக்கொண்ட ஒரு அமைச்சரவையை காங்கிரஸ் ஆதரவுடன் அமைக்கவும் நீண்டகாலமாகவே பி. சி. கோஷின் கேரளத்து மாமன் மச்சான்கள் சதி செய்து கொண்டுதான் வருகிறார்கள். ஆனால், சென்ற வருடமே இந்தச் சூழ்ச்சி அம்பலமாக்கப்பட்டது; எனினும் அது தொடர்ந்து நடந்துதான் வந்தது. இப்பொழுது அது பகிரங்கமாக வெடித்து வெளி வந்துவிட்டது.

### மக்களின் நலனே பெரிது

இந்தத் துரோகச் செயலானது எல்லா மக்களுக்கும் அதிர்ச்சியைத்தான் கொடுத்தது. பூர்ஷ்வாப் பத்திரிகைகளோ இதை, ஏதோ ஐக்கிய முன்னணிக் கட்சிகளுக்கிடையே நடக்கும் சண்டை சச்சரவுகளாகவே சித்தரித்தன. ஆயினும் இதனுடைய முக்கியத்துவம் மிகவும் ஆழமானது. ஒரு கடுமையான பொருளாதார நெருக்கடியின் மத்தியில் இது நிகழ்கிறது. ஐக்கிய முன்னணிக் கட்சிகளும் ஐக்கிய முன்னணி அமைச்சரவையும் திட்டவட்டமாக, தீர்மானமாக வெகுஜனங்களுடைய நலன்களைப் பாதுகாக்கவும், சுரண்டல் வர்க்க நலன்களைக் கட்டுப்படுத்தவும் முன்வர வேண்டிய சமயத்தில் இந்தத் துரோகம் தலை தூக்கியுள்ளது. மக்களின் நலன்களைப் பாதுகாப்பதை ஐக்கிய முன்னணியின் பங்காளிகள் கைவிடும் பொருட்டு, ஐக்கிய முன்னணிக்கு விரோதமாக சுரண்டல் வர்க்கங்களின் எதிர்ப்பு பலமடைந்து வருகிறது; அவர்களின் பிரச்சார வேகமும் உரத்து வருகிறது. வர்க்கப் போராட்டம் ஆழமாகவே, ஐ. மு. கட்சிகளிடையே திகிலும் ஊசலாட்டமும், முடிவாக துரோகமும் ஏற்படுகின்றது. ஏனென்றால் இந்தக் கட்சிகளின் தலைமையானது தேர்தல் ஆயத்தத்துக்காக காங்கிரஸ் எதிர்ப்பு பேசி, தீவிரவாதிகளாகக் காட்டிக்கொண்டார்கள். ஆனால், வர்க்கப் போராட்டம் மேலோங்கிக் கொண்டிருக்கிற நேரத்தில் மக்களைக் கைவிடுகிறார்கள் மேலும் மேலும் அதிகரித்து வரும் சுயநல வர்க்கங்களின் எதிர்ப்புகளைத் தாக்குப்பிடித்துக்கொண்டு ஐக்கிய முன்னணித் திட்டங்களை அமுலாக்க முனைந்துள்ளதும், மக்களுக்கு விசுவாசமாக எஞ்சி நிற்பதுமான நமது கட்சியுடன், இதர கட்சிகள் கூர்மையாக முரண்படுகின்றன. இதனால் தான், இக்கட்சிகள் ஐக்கிய முன்னணி மீது அவதூறு பொழிகின்றன, முரண்பட்டு மோதுகின்றன. ஐக்கிய முன்னணியையே சீர்குலைக்க முயல்கின்றன.

### குட்டிக் கூட்டணியின் அறிக்கை

*1969 அக்டோபர் முதல் வாரத்தில் கேரள முஸ்லீம்லீக் தலைமையினர் லீக், வலது கம்யூனிஸ்ட், இந்திய சோஷலிஸ்ட் கட்சி, ஆர். எஸ். பி. ஆகிய நான்கு கட்சிகளின் சார்பாக விடுத்த ஒரு அறிக்கையானது, நாம் மேலே கூறிய கூற்றுக்களை மெய்ப்பிக்கின்றது.*

*அந்த அறிக்கையில் அவர்கள் என்ன கூறினார்கள்?*

*முதலாளித்துவ — நிலப்பிரபுத்துவ அரசியல் சட்டத்தை உறுதியாகக் கடைபிடிப்போம் என்று சொன்னார்கள்.*

*முதலாளித்துவக் கோர்ட்டுகளை மதிப்போம் என்று சொன்னார்கள்.*

*மத்திய அரசுக்கு எதிராகப் போராடுவதை எதிர்ப்போம் என்று சொன்னார்கள்.*

*நிலமற்ற விவசாயத் தொழிலாளர்கள் உபரி நிலங்களை எடுத்துக்கொள்ளுவதை எதிர்ப்போமென்றும் சொன்னார்கள்.*

மக்களுடைய கோரிக்கைகளோ அதிகரித்துக்கொண்டிருக்கும் சமயத்தில், இந்தக் கட்சிகளோ முதலாளித்துவ — நிலப்பிரபுத்துவ ஆட்சிக்கு விசுவாசம் செலுத்த முன் வந்தன; அதன் மீது நம்பிக்கை வைத்தன; மத்திய அரசுக்கு எதிரான போராட்டங்களை நிராகரித்தன; வெகு ஜனப் போராட்டங்கள் அனைத்துக்கும் எதிர்ப்பு தெரிவித்தன. இவ்வாறாக, அக்கட்சிகள் தங்கள் தலைமையின் மூலம் சுரண்டல் வர்க்கங்களின் குரலையே எதிரொலித்தன; பொதுமக்களின் புரட்சிகரமான போராட்டங்களுக்கு உதவியாக இருக்கும் வகையில் அமைச்சரவைகள் நடத்தப்படுவதை யார்யாரெல்லாம் விரும்பவில்லையோ, அவர்களது குரலையே இவைகள் எதிரொலித்தன.

### திருத்தல் வாதிகளின் பாசாங்கு

விவசாயத் தொழிலாளர்கள் நலத்துக்காக நடத்தும் போராட்டங்கள் மேலோங்கிக்கொண்டிருப்பதைக்கண்டு, முஸ்லீம் லீகும் திருத்தல்வாதிகளும் திகிலடித்துப்போனார்கள் லீக்கட்சியினர் நிலச் சட்டத்தை எதிர்த்ததுடன், சட்டமன்ற நடைமுறைக் குழுவில் இதுபற்றிய முடிவுகளை எடுக்கவிடாதபடி நாசவேலைகளில் ஈடுபட்டார்கள் திருத்தல் வாதிகளோ இதை ஆதரிப்பதாகப் பாசாங்கு செய்துகொண்டே, லீக் செய்ததையே செய்தார்கள். இத்துடன், அரசாங்கச் செலவில் நவீன இயந்திரங்களை நிலப்பிரபுக்களுக்கு கொடுத்துதவி, விவசாயத் தொழிலாளர்களின் ஜீவனத்திலேயே நேரடித் தாக்குதல் தொடுத்தார்கள். நிலத்துக்கான போராட்டங்களில் விவசாயத் தொழிலாளர்கள் இறங்கினால், அவர்களின் போராட்டங்களை 'ரௌடித்தனம்' என்று நிராகரித்தார்கள்.

இந்தத் துரோகம் எங்கிருந்து முளைத்தது? இந்தக் கட்சிகளின் தலைவர்கள் சார்ந்திருக்கிற வர்க்கச்சார்பிலிருந்துதான் இது முளைத்தது. காங்கிரஸ், சுரண்டல் வர்க்கங்கள் ஆகியவற்றின் முகாமுக்கு இந்தக் கட்சிகள் ஓடுகின்றன என்பதையே இது காட்டுகிறது; இவையெல்லாம் காங்கிரஸ் கட்சியில் இந்திரா காந்தி கோஷ்டியின் பின்னால் அணிவகுக்கும் ஒரே நோக்கத்திற்காகவே இப்படியெல்லாம் இறங்கியிருக்கிறார்கள்.

### வாக்குறுதியை மீறினர்

இதனால்தான், கேரளத்தில் நமது கட்சிக்கு எதிராக இந்தக் கட்சிகளெல்லாம் அவதூறு இயக்கத்தைக் கட்டவிழ்த்து விட்டு, ஐக்கிய முன்னணியை உடைக்க உறுதி பூண்டிருக்கிறார்கள். அவர்கள் ஐக்கிய முன்னணியின் புனிதமான ஒவ்வொரு விதியையும் மீறியிருக்கிறார்கள்: மக்களுக்குக் கொடுத்த ஒவ்வொரு வாக்குறுதியையும் மீறிவிட்டார்கள்; முடிவாக, ஊழலை எதிர்த்துப் போராடுவது என்பதன் பேரால், காங்கிரஸ் கட்சியுடன் கைகோர்த்து நிற்கிறார்கள். ஐக்கிய முன்னணிக்கு கேவலமுண்டாக்கி கேலிப் பேச்சுக்கிடமாக்கியதுடன், சுரண்டல் வர்க்கங்களுக்கு எதிராக ஐக்கிய முன்னணி நடத்தி வரும் போராட்டத்தை முழுக்க முழுக்க நிலைகுலையச் செய்தார்கள்.

விவகாரங்கள் இப்படி சீர்கெட்டுக்கிடக்கும் நிலைமையை, நமது கட்சி ஜூனிமேலும்

---

## திருச்சி - ஸ்ரீரங்கம் சுருட்டுத் தொழிலாளர்கள் பொது வேலை நிறுத்தம்

திருச்சி-சீரங்கத்தில் உள்ள சுருட்டுத் தொழிலாளர்கள் அனைவரும் கட்சி வித்தியாசமின்றி சுமார் 750 பேர் கடந்த 26—9—69 முதல் கூலி உயர்வு கோரிக்கையை நிறைவேற்றக் கோரி பொது வேலை நிறுத்தம் செய்துள்ளனர்.

### சட்டப் பாதுகாப்பு அமுலாகவில்லை

தொழிலாளர்களின் நலனைப் பாதுகாக்க சட்டப்பாதுகாப்புகள் இருந்தும் சுருட்டுத்தொழிலாளர்களுக்கு அமுலாக்கப்படவில்லை சர்வீஸ் பாதுகாப்பு போனஸ் தேசீய பண்டிகை, விடுமுறைகள், வருட லீவு போன்ற சம்பளத்துடன் உள்ள லீவு வசதிகள் இல்லை. இதுமட்டுமல்ல, மாதம் பூராவுமே போதுமான வேலை கொடுப்பதில்லை. வேலையில்லா நாட்களுக்கு நஷ்ட ஈடும் கொடுப்பதில்லை. காலை 7 மணி முதல் இரவு 9 மணி வரை சில நாட்கள் சில கம்பெனிகளில் 10 மணி வரை வேலை செய்து அதாவது சுமார் 14 15 மணி நேரம் எவ்வித சுகாதார வசதியுமில்லாத இடத்தில் வேலை செய்து கூலிபெறக்கூடிய நிலையில் உள்ளனர்.

விலைவாசி விஷம்போல் உயர்ந்துகொண்டே உள்ளது. அதை ஈடுகட்டக்கூடிய அளவு சாதாரண மனிதன் சாதாரண வாழ்க்கை நடத்தவாவது கூலி நிர்ணயம் வேண்டும் என்பதுதான் தொழிலாளர்களின் நியாயமான கோரிக்கையாகும்.

மத்திய அரசாங்கம் பீடி, சுருட்டுத் தொழிலாளர்கள் பாதுகாப்புச் சட்டம் கொண்டு வந்தது அதையும் முதலாளிகள் சிலர் உயர்நீதிமன்றத்தின் மூலம் நிறுத்திவைத்து விட்டார்கள்.

### கடைசி ஆயுதம்

தொழிலாளர்களின் கோரிக்கைகளை முதலாளிகளுக்கு தாக்கல் செய்து சமரசமாக பேசித் தீர்க்க சங்கம் முயற்சி எடுத்தது. சுருட்டு முதலாளிகள் திட்டமிட்டு வேண்டுமென்றே காலம் கடத்தும் போக்கைக் கொண்டதால்தான் தொழிலாளர்கள் கடைசி ஆயுதமான வேலை நிறுத்தப் போராட்டத்தில் ஈடுபட வேண்டிய நிலை ஏற்பட்டது.

———

# வாதிகளின் மாபெரும் துரோகம்

## மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி கண்டனம்

பொறுத்துக்கொள்ளப்போவதில்லை என்பதுதான் பொலிட்பீரோவின் கருத்தாகும். பிரிந்துபோன கட்சிகள் ஒன்று. தங்களுடைய குணப்போக்கைச் சரி செய்துகொண்டு, ஐக்கிய முன்னணிக்கொள்கைகளுக்குத் திரும்பிவர வேண்டும்: அல்லது நம்முடைய கட்சி இன்றைய நிலைமையிலிருந்து தன்னைத்தானே கத்தரித்துக் கொள்ள வேண்டும்.

இப்பொழுதுகூட நமது கட்சி, இக்கட்சிகளனைத்தின் தலைவர்களையும் நோக்கி, ''உங்களுடைய சீர்குலைவுக் கொள்கைகளைக் கைவிட்டுவிட்டு நேர்மையின் பக்கம் திரும்புங்கள்: மக்களுக்கு விசுவாசமாக இருங்கள்'' என்று அழைக்கிறது.

### பொலிட்பீரோ வேண்டுகோள்

அதே சமயத்தில், இதர எல்லாக்கட்சிகளின் அணிகளுக்கும் கேரளத்திலுள்ள சாதாரண மக்கள் அனைவருக்கும் பொலிட்பீரோ பணிவுடன் விடுக்கும் வேண்டுகோள் இதுதான். ''எல்லோரும் எழுந்து வாருங்கள், ஐக்கிய முன்னணியையும் அதன் அமைச்சரவையையும் காப்பாற்றுங்கள்'' என்பதுதான் அந்த வேண்டுகோள். நமது கட்சி தலைமைப்பாத்திரம் வகிக்கும் ஐக்கிய முன்னணி அமைச்சரவையானது, மக்களின் பாதுகாவலனாகவும், வெறுத்து ஒதுக்கப்பட்ட காங்கிரஸ் கட்சி மீண்டும் வராதபடி தடுத்து நிறுத்தக்கூடிய உத்தரவாதமாகவும் இருந்து வந்திருக்கிறது. இப்படிப்பட்ட கேரள ஐக்கிய முன்னணி இடிந்து நொறுங்க அனுமதிப்பதானது, சரணடல் வர்க்கங்களுக்கு அளிக்கப்படும் மிகப் பெரிய பரிசாகவே இருக்கும்; நடைமுறையில் நோக்குமிடத்து சிண்டிகேட்—ஜனசங்கம்—சுதந்திரா ஆகிய முக்கூட்டின் சதிகளுக்கு உதவுவதாகவே இருக்கும். ஆதலால், இந்தியா முழுவதுமுள்ள மக்கள் தலையிட்டு, இந்தச் சீர்குலைவினின்றும் ஐக்கிய முன்னணியைக் காப்பாற்ற வேண்டியது அவர்களின் கடமையாகும்.

ஐக்கிய முன்னணியின் கீழ் அரசாங்க நிர்வாகம் சுத்தமாக இருக்கவேண்டுமென்ற லட்சியத்தை பொலிட்பீரோ உறுதியாக உயர்த்திப் பிடிக்கிற அதே பொழுதில், காங்கிரஸ் இயந்திரத்துக்குத் தீனி கொடுக்கும் முறையில் முன்னணியைச் சீர்குலைக்கவும், இழிவுபடுத்தவும் காங்கிரசிற்கு உதவி புரியும்படியான முறையில், திருத்தல்வாதிகளும் அவர்களது கூட்டாளிகளும் செய்யும் கொள்கையற்ற முயற்சிகளை பொலிட்பீரோ பகிரங்கமாகக் கண்டிக்கமாலிருக்க முடியாது.

### நமது நிலை

சட்டமன்றத்தில் சட்டபூர்வமாகச் செல்லத்தக்க ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டிருந்த போதிலும், அதுபற்றிக்கூட கருதாமல், அமைச்சர் வெல்லிங்டன்மீது கொண்டு வரப்பட்ட ஊழல் குற்றச்சாட்டுகள் உட்பட, ஐக்கிய முன்னணிக் கட்சிகள் மேலும் எந்தெந்த அமைச்சர்கள்மீது ஊழல் குற்றச்சாட்டுகளைக் கொண்டு வந்தனவோ அந்தக் குற்றச்சாட்டுகள் அனைத்தையும் விசாரணைக் குழுவுக்கு விட, எங்கள் கட்சி தயாராகவே இருக்கிறது என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறது. எங்களது இந்த முடிவானது, ஊழலை எதிர்த்துப் போராட விரும்பும் எவருக்குமே உண்மையில் மனநிறைவை ஏற்படுத்தும். ஆனால், அமைச்சரவையை உடைக்க முழு மூச்சுடன் முனைந்திருக்கும் திருத்தல்வாதிகளுக்கும் முஸ்லீம் லீகுக்கும் இது பிடிக்கவே இல்லையென்பது வெளிப்படையாகத் தெரிந்துவிட்டது. அவர்கள் ஐக்கிய முன்னணி அமைச்சரவைக்கு அளித்து வந்த ஆதரவை வாபஸ் செய்வதாக முடிவெடுத்து அறிவித்தார்கள். அவர்களது குற்றங்களை மறைப்பதற்காக, அவர்கள் இப்போது மக்களின் சில குறைகளை குறிப்பிட்ட காலத்துக்குள் நிறைவேற்றவேண்டுமென்று இறுதி எச்சரிக்கைப் பிரகடனம் செய்து, மக்களின் காவலர்கள்போல் நடிக்க முற்பட்டிருக்கிறார்கள்.

### மேற்கு வங்கத்திலும்

மேற்கு வங்கத்திலும் இதே போன்ற நிலைமை உருவாக்கப்பட்டு வருகின்றது என்பதையும், ஐக்கிய முன்னணியைச் சீர்குலைக்கும் விதைகள் தூவப்பட்டு வருகின்றன என்பதையும் பொலிட்பீரோ சுட்டிக்காட்டி எச்சரிக்கிறது. 1967 அக்டோபரில் நடத்திய அதே நிகழ்ச்சியை மீண்டும் நடத்த பி. சி. கோஷின் மாமன்மச்சான்கள் சுறுசுறுப்பு காட்டி வருகிறார்கள்; அதே துரோகத்தைச் செய்ய சில கட்சிகள் திட்டமிட்டு வருகின்றன. டாங்கே கும்பலும் சோஷலிஸ்ட் யூனிட்டி செண்டரும் நம்முடைய கட்சிமீது சேற்றை வாரி வீசி வருகிறார்கள்; இப்பொழுது பங்களா காங்கிரசும் பார்வர்டு பிளாக்கும் நம் கட்சிக்கு எதிராக அவர்களுடன் கை கோர்த்துக் கொண்டிருக்கிறார்கள். குறிப்பாக, உள்துறை அமைச்சகத்தின் மீது குறி வைத்துத் தாக்கிறார்கள்; சட்டமும் ஒழுங்கும் போய்விட்டதாக காங்கிரஸ் எழுப்பும் கூக்குரலையே, இவர்களும் அடிமைகள் போன்று எதிரொலிக்கிறார்கள்.

### சரண்டல் முகாமை நோக்கி

இந்தக் கட்சிகளையெல்லாம் மீண்டும் பீதியடையச் செய்த நிகழ்ச்சிகள் யாவை? இப்பொழுது வங்காளத்தில் வர்க்கப் போராட்டம் மேலோங்கிக் கொண்டிருக்கிறது. அரசாங்க நிலத்தை சட்ட விரோதமாக நிலப்பிரபுக்கள் ஆக்ரமித்துக் கொண்டிருக்கிறார்கள். அந்த நிலத்தைத் தாங்கள் அடைவதற்காக வங்க விவசாயிகள் பெரும் போராட்டங்களை நடத்தி வருகிறார்கள்; தொழிலாளர்கள், பலமான வேலை நிறுத்தப் போராட்டங்கள் நடத்தி முதலாளிகளுடைய இரும்புப் பிடியினின்றும் அநேக சலுகைகளைப் பெற்றிருக்கிறார்கள். சுரண்டல் வர்க்கச் சார்புடைய கட்சியாக பங்களா காங்கிரஸ் இருப்பதினாலே, கெரோக்களையெல்லாம் அடக்கி ஒடுக்க வேண்டுமென்ற கோரிக்கையை பகிரங்கமாகவே முன் வைத்துள்ளது. ஐக்கிய முன்னணிமீதும், நமது கட்சி மீதும் பங்களா காங்கிரஸ் கடுமையான தாக்குதல் தொடுப்பதெல்லாம், நிலப் பிரபுக்களின் குரல் தானேயொழியவேறல்ல. அஜய்முகர்ஜி அமைச்சரவைக்குள்ளோ அல்லது ஐக்கியமுன்னணிக்குள்ளோ எந்தவொரு பிரச்னையையும் எழுப்பாமல், அவர் தன்னுடைய சொந்த அரசையே தாக்க முற்பட்டிருப்பது விசித்திரமாக இல்லையா?

(9-ஆம் பக்கம் பார்க்க)

---

### பம்பாயில் ''பாரதி'', ''திரு.வி.க,'' ''ஜீவா'' நினைவு விழா

பம்பாய் ஜனநாயக வாலிபர் சங்கம் 28-9-69 அன்று காலை 9-30 மணிக்கு சங்க பணிமனையில் ''பாரதி'' ''திரு. வி. க.'' ''ஜீவா'' ஆகிய முப்பெருந் தலைவர்களின் நினைவுதினம் கொண்டாடப்பட்டது. விழாவிற்கு சங்கத்தலைவர் தோழர் பி. ராமசாமி தலைமை வகித்தார்.

''பாரதி'', ''திரு. வி. க.'' ''ஜீவா'' முப்பெரும் தலைவர்களின் படத்தை முறையே திரு. வெங்கடகிருஷ்ணன் அருட்பா மணி புலவர் திரு. கோ.சீராமன், தோழர் களந்தை அலியார் திறந்து வைத்து பேசினார்கள்.

சொற்பொழிவாற்றியவர்கள்: தோழர் எம். டி. கிருஷ்ணசாமி தோழர் ஜே. வி. ஜானையாநீல் தோழர் கே. எஸ். கணேசன் தோழர் எம்.பூசிக் தோழர் ஜி. சேனையா.

27-9-69 அன்று மாலை நடத்திய ''பாரதி சொற் போரில்'' வெற்றிபெற்ற நான்கு மாணவமணிகளுக்கு பரிசுகள் வழங்கப்பட்டன.

மாலை 3 மணிக்கு ''பாரதி மக்கள் கவியா'', ''வேதாந்த கவியா'' என்ற பொருள் பற்றி நடைபெற்ற பட்டிமன்றத்தில் புலவர் கோ. சீராமன் அவர்கள் வேதாந்தக்கவி அணிக்கும் தோழர் மா. பா. வீரபாண்டியன், மக்கள்கவி அணிக்கும் தலைவர்களாக இருந்து வாதித்தனர். திரு. வே. நாகராஜன் அவர்கள் நடுவராக இருந்து இருதரப்பினரையும் பாராட்டி ''பாரதி மக்கள் கவிதான்'' என்றாலும், வாதத்தில் வேதாந்த கவியில் நின்றவர்கள் தங்களின் சொற் சிறப்பால் வாகை சூடினர் என்று தீர்ப்பு கூறினார்.

இறுதியாக சங்கச் செயலர் தோழர் அ. பொ. தில்லைநடராஜன் நன்றிகூறினார்.

---

# அமராவதிதொழிலாளர்களின் உரிமைப் போராட்டம்

கோவை மாவட்டம் அமராவதி கூட்டுறவுச் சர்க்கரை ஆலைத் தொழிலாளிகள் 3—10—69லிருந்து தங்களுடைய கோரிக்கைகளுக்காகப் போராடி வருகிறார்கள். இதுவரை 140 ஆண்களும், 30 பெண்கள் 31 கைக் குழந்தைகளோடும் கைது செய்யப்பட்டுள்ளார்கள். பெண்கள், குழந்தைகள் ஜாமீனில் விடப்பட்டுள்ளனர். ஏனைய 140 ஆண்கள் கோவைச் சிறையில் உள்ளனர்.

இது கூட்டுறவுச் சர்க்கரை ஆலையாக இருந்தாலுங் கூட இங்கு பாக்டரிச் சட்டம், ஏனைய தொழிற்சட்டம் எதுவும் முறையாக அமுல் நடத்தப்படுவதில்லை. தொழிலாளர்களின் எந்த நியாயமான கோரிக்கைகளும் ஏற்கப்படுவதில்லை. ஒரே ஊழல்மயம். எனவே போர்டு கலைக்கப்பட்டுள்ளது. விசேஷ அதிகாரி (பாரதி என்ற பெயருள்ளவர்) ஒருவர் நியமிக்கப்பட்டுள்ளார். ஆனால் அவர் அங்கு நடத்துவது காட்டு ராஜா தர்பார்தான். சட்டபூர்வமாக இயங்கும் தொழிற்சாலையாக அது இல்லை. இங்கு காட்டூர் கோபால தலைமையில் உள்ள சங்கம் (தி மு க) நிர்வாகத்தினருக்கு வால் பிடிக்கும்சங்கமாக உள்ளது. எனவே நமது செங்கொடிச் சங்கமும், ஐ. என். டி. யூ. சி. சங்கமும் தோழர் மணிதலைமையிலுள்ள மற்றொரு தி மு.க. சங்கமும்கூட்டாகச் சேர்ந்து அதிகாரியின் காட்டு ராஜா தர்பாரை எதிர்த்துப் போராடவேண்டியுள்ளது. தொழிற்சாலை நிர்வாகிகள் எத்தகைய பேச்சுவார்த்தைக்கும் தயாராக இல்லை. எனவேதான் வேலை நிறுத்த நோட்டீசு கொடுக்கப்பட்டுள்ளது. இந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு 3—10—69 இரவு நிர்வாக அதிகாரியினர் டிபார்ட்மெண்டுக்குள் புகுந்து இரு தி மு. க. தொழிலாளர்களை வாய்க்கு வந்தபடி திட்டியும், அடித்தும் வெளியே விரட்டியுள்ளனர். இதை எதிர்த்து ஏனைய தொழிலாளர்கள் ஆட்சேபித்துப் போராடினர். நிர்வாகம் ஷிப்டுகளை நிறுத்தியது. போலீஸ் வரவழைக்கப்பட்டது. காட்டூர் கோபால் நடத்தும் சங்கத்தின் முன் முயற்சியின்பேரில் 70 பேர் வெளியாட்கள் ஆலைக்குள் கொண்டு வரப்பட்டனர். அவர்களைக் காட்டித் தொழிலாளர்களைப் பயமுறுத்தியது. இரவிலேயே 100 தொழிலாளர்களுக்குமேல் கைது செய்யப்பட்டனர். மறுநாள் 30 பெண்கள் 31 குழந்தைகளுடன் கைது செய்யப்பட்டனர். இவ்வாறு நிர்வாகத்தினரின் அடாத செயலால் வேலை நிறுத்தம் ஏற்பட்டுள்ளது. செங்கொடி சங்கம், ஐ என். டி. யூ. சி. தி.மு.க. சங்க ஊழியர்கள் அனைவரும் கைதாகியுள்ளனர். காட்டூர் கோபாலின் சங்கத்தால் வெளியிலிருந்து ஆட்சிகளைத் திரட்டி லாரி, ஜீப்புக்களில் கருங்காலி வேலை செய்ய கொண்டு வரப்படுகிறார்கள்.

அதிகாரியின் இந்த காட்டுமிராண்டிச் செயலை எதிர்த்து மேலதிகாரிகளுக்கும், அரசுக்கும் தெரிவித்து தோழர் கே. ரமணி தலைமையிலுள்ள சங்கம் ஐ என். டி. யு. சி., தி. மு.க.சங்கமும் சேர்ந்து போராடி வருகின்றன. சகல தொழிலாளர்களையும்விடுதலைசெய்யுமாறும், பேச்சுவார்த்தைகளின் மூலம் தீர்த்துக் கொள்ளலாமென்றும், பேச்சு வார்த்தைகளின் மூலம் முடியாதவற்றை லேபர் கோர்ட்மூலம் தீர்த்துக்கொள்ளலாமென்றும் முன் போலவே ஆலையைத் துவக்குமாறும் கோரி முதலமைச்சருக்கும், தொழிலமைச்சருக்கும், பொதுப்பணித்துறை அமைச்சருக்கும் மனுக்களை அனுப்பியுள்ளனர்.

———

# கோவை மாவட்ட பொறியியல் தொழிலாளர் கோரிக்கைகள்

கோவை என்ஜினியரிங் தொழிலாளர் சங்கமகாசபைக் கூட்டம் சென்ற மாதம்கடைசி வாரத்தில் நடைபெற்றது.

பொதுச் செயலாளர் தோழர் டி. பாலன் ஆண்டறிக்கை சமர்ப்பித்தார். விவாதத்திற்குப் பிறகு அது ஏகமனதாக ஏற்றுக்கொள்ளப் பட்டது.

அதன் பிறகு, சங்கச் செயலாளர்களில் ஒருவரும், கோவை நாடாளுமன்ற உறுப்பினருமாகிய தோழர் கே. ரமணி அவர்கள் இன்றைய நிலைமையும், தொழிலாளர்களின் கடமையும்பற்றி விளக்கமாக சிறப்புரையாற்றினர்.

அதற்குப் பிறகு ஆடிட்டரால் அங்கீகாரம் செய்யப்பட்ட வரவு-செலவு கணக்கை பொருளாளர் சி.என். கிருஷ்ணசாமி சமர்ப்பித்தார். அதை மகாசபை ஏகமனதாக அங்கீகாரம் செய்தது.

## புதிய நிர்வாகிகள்

அதன் பிறகு, அடுத்த வருட நிர்வாகிகள் தேர்தல் நடைபெற்று கீழ்க்காணும் தோழர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

தலைவர் - எஸ். குழந்தைவடிவேல், உபதலைவர்கள் - எஸ் இருளப்பன், கே: சிவசாமி, எஸ் கிருஷ்ணன் பொதுச் செயலாளர் டி. பாலன், காரியதரிசிகள் - தோழர்கள் கே.ரமணி, எம். பி., வி. எம். ராஜு, எ. பி. ராமசாமி பொருளாளர் வி. ஜெயகோபால்.

மேலும்,நிர்வாகக்குழு உறுப்பினர்களாக, தோழர்கள் ஆர். ஆறுமுகம், கே. ஆர். ஜெகநாதன், சி. என். கிருஷ்ணசாமி, கே.நாச்சிமுத்து, காளியப்பன், நெல்சன், கே. நாராயணன், ஆர். கிருஷ்ணசாமி, அண்ணுமலை, யு. கே. வெள்ளிங்கிரி, ஆறுமுகம, சண்முகசுந்தரம், செல்லப்பன், எம். பழனிசாமி ஆகியவர்களும் ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

எஞ்சினீயரிங் சம்பள போர்டில், தொழிலாளர்கள் தரப்பு சமர்ப்பித்த சிபார்சை ஏற்று அமுல் நடத்த வேண்டுமாயும், டெக்ஸ்டூல் கம்பெனியை அரசு எடுத்து நடத்தவேண்டுமாயும், சம்பளம், இதர பாக்கிகள் கிடைக்கவும், எல்லாத் தொழிலாளர்களுக்கும வேலை கிடைக்கவும் உடனடியாக அரசு நடவடிக்கைகள் மேற்கொள்ள வேண்டுமாயும், ஸ்டாக் இருந்த மெஷினரிகள், எஞ்சின்கள் விற்கப்பட்டும் சம்பள பாக்கிகள் கொடுக்காததையும், தற்போது வேலையில்லாமல் இருப்பவர்களுக்குப்; லே - ஆப் சம்பளம் கொடுக்க மறுத்து வருவதையும், திரு. லேபர் கமிஷனர் அவர்கள் "டைரக்ஷன்" உட்பட மீறி ஒப்புக்கொண்டபடி வேலை கொடுக்க வேண்டியவர்களை வேலைக்கு எடுக்காமல் வேண்டியவர்களுக்கு வேலை கொடுத்து வருவதையும், ஏ. ஐ டி. யு சி. சங்கதலைவர்களை பட்டும் குறிப்பிட்டு பழிவாங்கும் நோக்கத்தோடு திரு. கமிஷனர் அவர்கள் டைரக்ஷன்படி வேலை கொடுக்க வேண்டியவர்களை திட்டமிட்டு வேலை கொடுக்க மறுத்து வருவதையும், வன்மையாகக் கண்டிப்பதோடு, இந்த பிரச்னைகள் சம்பந்தமாக தொழில் நல அதிகாரிகள் நடவடிக்கை எடுக்காமல் "ஹைபவர் கமிட்டி" ரிப போர்ட் வரட்டும் என்று காலம் கடத்தி வருவதையும், இம்மகா சபை கண்டிப்பதோடு உடனடியாக நடவடிக்கை எடுத்து பிரச்னைகளுக்கு முடிவு காணவிட்டால், தொழிலாவர்கள் வேலை நிறுத்த போராட்டம் நடத்துவதைத் தவிர வேறு வழியிலலை என்றும்,—டெம்பரவரி கேசுவல், பீஸ்ரேட், காண்ட்ராக்ட் முறைகள் ஒழிக்கப்பட வேண்டுமெனவும் காரமடைப் பகுதிக்கும்—இனசூரன்ஸ் திட்டம் விஸ்தரிககப் படவேண்டுமெனவும் இ.எஸ். ஐ. ஆஸ்பத்திரி, மருந்தக வேலை நேரம் மாலை 6—30 மணி வரை திறந்திருக்க நடவடிக்கை எடுக்கவேண்டுமெனவும்,

## அனைவருக்கும் இ. எஸ். ஐ. உதவி

எல்லா இஞ்சினியரிங்தொழிலாளர்களுக்கும் இ. எஸ். ஐ. உதவி கிடைக்க, இ எஸ். ஐ. சட்டத்தில் 20 அல்லது அதற்கு மேல் தொழிலாளர்கள் வேலை செய்யும் தொழிற்சாலைகளுக்குத்தான் பொருந்தும் என்ற ஷரத்தை எடுத்து விட்டு, எல்லா எஞ்சினீயரிங் தொழிற்சாலைகளையும் உட்படுத்த வேண்டுமெனவும், —50 பேர்களுக்கு குறைவாக வேலை செய்தாலும், லே-ஆப் காம்பன்சேஷன் கிடைக்க லே-ஆப் காம்பன்சேஷன் சட்டத்தை திருத்த வேண்டுமாயும் இம்மகாசபை கேட்டுக் கொள்கிறது.

தொழிலாளர்களிடமிருந்து பிடித்தம் செய்யும் பிராவிடண்ட் பண்டு பணத்தை கட்டாத முதலாளிகள் மீது நடவடிக்கைகள் மேற்கொள்ள வேண்டுமெனவும், நிறுத்தப்பட்டோ,ராஜினுமா செய்தோ வேலையிலிருந்து நிற்கும் தொழிலாளர்களுக்கு, அவர்களுக்குச் சேர வேண்டிய பிராவிடண்ட் பண்டு, முதலாளி பணம் சட்டினுலும் கட்டாமலிருந்தாலும் அரசு பொறுப்பு எடுத்து கணக்குத் தீர்க்க வேண்டுமாயும், தகராறுகளில் போலீஸ் தலையீடு தடுக்கப்படவேண்டுமென்றும், வேலை நீக்க பிரச்னைகள் தொழில் தகராறுகளில் போலீஸ் தலையீடு தடுக்கப்பட வேண்டுமென்றும், வேலை நீக்க பிரச்னைகள் தொழிற் கோர்ட்டுக்கு விட மறுத்து வரும், தமிழக அரசின் போக்கை ஆட்சேபித்து,வேலை நீக்க பிரச்சனைகள் தொழிற் கோர்ட்டுக்கு விட வேண்டுமாயும்,—சம்பளக் குறைப்பு-வேலைப்பளு உயர்வு-முறைக்கு சட்ட அங்கீகாரமளிக்கும் போக்கை மாற்ற வேண்டுமாயும்,— எல்லாத் தொழிலாளர்களுக்கும், 1969-70 ஆம் ஆண்டுக்கு 50 சதவிகிதம் போனஸ் கொடுக்க வேண்டுமாயும், பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

## எடை போடுக

மேலும், ரயில் வாகன மூலமாக வரும் கோக்கு, பிக் அயர்ன் போன்ற மூலப் பொருட்கள் எடை சரியாக இருப்பதில்லை. உதாரணமாக, கோவையில் 20 டன் இருக்க வேண்டிய பிக்அயர்ன் 10 டன், 7 டன் ஆகக்கூட குறைவு ஏற்பட்டு வருகிறது. இதற்கு ரயில்வே நிர்வாகமோ அல்லது அனுப்புபவர்களோ பொறுப்பு எடுப்பதில்லை. இதனால், சிறு தொழிலதிபர்கள் பெரிதும் பாதிக்கப்படுவதோடு, தொழிலாளர்கள் வேலை இழக்கவும் காரணமாகிறது.

எனவே, வேகனில் ஏற்றப்படும் மூலப் பொருட்கள்,இறக்கப்படும் இடங்களில் எடை போட்டுக் கிடைக்க அரசாங்கம் உடனடியாக நடவடிக்கை எடுக்க வேண்டுமாயும். கோக், பிக் அயர்ன், ஸ்டாம்பிங் தகடு, ஸ்டீல் தகடுகள் போன்றவைகள் தேவையான அளவுகாலாகாலத்தில் கிடைக்காததால் தொழில்கள் தேங்கவும், ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் வேலையிழக்கவும் நேரிடுகிறது. எனவே, மூலப் பொருடகள் தேவைப்படும் போது கிடைக்கப்போதுமான உத்திரவாதமேற்படுத்தவேண்டுமாயும், மத்திய, மாநில அரசுகளை இம்மகாசபை கேட்டுக் கொள்ளுகிறது.

———

## தாராபுரம் பஞ்சாலையில் போராட்டம்

தாராபுரம் கூட்டுறவுப் பஞ்சாலையில் 7 பேர் வேலையிலிருந்து நீக்கப்பட்டதை எதிர்த்தும், நீண்ட காலமாக கோரிக்கைகளை நிறைவேற்றுததை எதிர்த்தும் முறையாக நோட்டீஸ் கொடுத்து 11—10—69ஆம் நாள் முதல் வேலைநிறுத்தம், போராட்டம் நடைபெற்று வருகிறது. 2 தோழர்கள் இரு நாடகளாக உண்ணுவிரதமிருந்து வருகின்றனர். இந்தக் கூட்டுறவு நிர்வாகப் போர்டில் இருப்பவர்கள் பெரும்பாலும் தி. மு. க. வினர். இவர்கள் தொழிற் சங்கத்தை உடைக்கத் திட்டமிட்ட தாக்குதலைத் தொகுத்துள்ளனர். நிர்வாகத்திற்கும், தொழிலாளருக்கும் நடக்கும் இப்போராட்டத்தில் லேபர் ஆபிசரும் போலீசாரும் நடுநிலைமை வகிப்பதற்குப் பதில் நிர்வாகத்திற்கு உடந்தையாகச் செயல்படுகின்றனர்.

———

# 14 மாதங்களுக்குப் பிறகு காவேரிமில் தொழிலாளர்கள் வேலைக்குச் சென்றனர்

கடந்த14 மாதங்களாக புதுக்கோட்டை காவேரி மில் கதவடைப்பு செய்யப்பட்டிருந்ததை நீங்கள் அறிந்ததே. பின் தங்கிய பகுதியிலிருக்கும் ஒரே பெரிய தொழிற்சாலை என்ற முறையில் அதைத் தமிழக அரசு ஏற்று நடத்த வேண்டும் என்று தொழிலாளிகள்கோரியதைதமிழக அரசு தொடர்ந்து மறுத்து வந்தது. தொழிலாளிகளின் பட்டினி நிலைமையை பயன்படுத்தி அவர்களின் சம்பளத்தை குறைக்கவும் வேலைப்பளுவை உயர்த்தவும், பாக்கிகளை கால வரையின்றி ஒத்திவைக்கவும் சட்டப்படியான உரிமைகளை பறிக்கவும் முதலாளிக்குஉதவும் வகையில் சிறுபான்மை சங்கத்தினர்களான ஐ என். டி. யு. சி.- தி. மு. க. சங்கங்கள் ஒப்பந்தங்கள் செய்தன. இதை அமுல் படுத்தப் போவதாகக் கூறி இந்திய தொழிற் சச்சரவு சட்டத்தின் 9 ஏ பிரிவுப்படி முதலாளி நோட்டீஸ் போட்டார். 6—10—69 தேதியன்று கதவடைப்பு நீக்கப்படுவதாகவும், அன்று பதிலிகள் தவிர மற்ற எல்லா தொழிலாளிகளும் அவரவர்கள் ஷிப்டில் ஆஜராக வேண்டுமெனவும், டைம் ஆபீசில் பழைய கார்டு கொடுத்து புதிய கார்டு பெற்றுக்கொள்ளவும் அறிவித்து நோட்டீஸ் போட்டனர்.

திருச்சி மாவட்ட பஞ்சாலைத் தொழிலாளர் சங்கமும்,திருச்சி மாவட்ட மில் தொழிலாளர் சங்கமும், ஸ்டாப் யூனியனும் தொழிலாளி விரோத ஒப்பந்தத்தை கூட்டாக ஆட்சேபனை தெரிவித்து லேபர் இலாகாமுன்னுல் கன்சிலேஷனுக்காக தாவா தாக்கல் செய்தது.

இந் நிலையில் தங்களின் ஒப்பந்தம் சட்டப்படி செல்லுபடியாகாது என்று உணர்ந்த மில் நிர்வாகம், ஒப்பந்தம் தன்னை கட்டுப்படுத்துமெனவும், அது சம்பந்தமாக எந்த தொழில் தாவாவும் தாம்கிளப்புவதில்லை என பாரம் அச்சடித்து, தொழிலாளிகளிடம் தனித் தனியாக நிர்ப்பந்தித்துகையெழுத்து வாங்க முடிவு செய்தது. இப்படி செய்வதின் மூலம் நமது மூனறு சங்கங்களும்கிளப்பிய தொழில் தாவா செல்லுபடியாகாமல் செய்யலாம் என்பது நிர்வாகத்தின் திட்டம். இந்த சதித் திட்டத்திற்கு ஐ. என். டி. யு. சி., தி. மு, க. சங்கங்கள் சம்மதம் தெரிவித்தனர். நோட்டீசில் குறிப்பிட்டுள்ளபடி, தொழிலாளிகள் டைம் ஆபீசில் சென்று பழைய கார்டு கொடுத்து புதிய கார்டு கேட்டதும், நிர்வாகம் தயாரித்தஉறுதிமொழி பத்திரத்தில் கையெழுத்திட மறுக்கும் தொழிலாளிகளுக்குபுதியகார்டு கொடுக்கப்படமாட்டாது என்று கூறப்பட்டது. புதிய கார்டு இல்லாத தொழிலாளிகளை வாட்சுமேன்கள் மில்லிற்குள் செல்வதைத் தடுத்தனர். தடுக்கப்பட்ட தொழிலாளிகளை வேலைக்கு ஆஜராகவில்லையென மில்லில் பதிவு செய்து 10—10 69 ஆம தேதிமுதல்அவர்கள் (தொழிலாளிகள்) தாமாகவே நினறுவிட்டார்கள் எனக் கூறுவதே முதலாளியின் சதியாகும்.

தொழிலாளிகள் மீது இந்த சதியை பலாத்காரமாகத் திணிக்க துப்பாக்கிகளுடனும் கண்ணீர் புகையுடனும், லத்திக் கம்புகளுடனும், ஏராளமான போலீசை தி. மு. கழக அரசு, மில் கேட்டிற்கு அனுப்பி வைத்தது. லேபர்ஆபீஸரும் ,மாவட்ட கலெக்டரும் தொழிலாளிகளுக்கு பாதுகாப்பாக தலையிடுவதையும் தமிழக அரசு தடுத்தது.

## முதலாளியின் நிர்ப்பந்தம்

6—10—69ஆம்தேதிமில்திறந்ததும். ஐ. என். டி. யு. சி. -தி. மு கழக சங்கங்களின் சார்பில், உறுதிமொழிப் பத்திரத்தில் கையெழுத்திட்டு வேலைக்கு ஆஜரான தொழிலாளிகள் 310 பேர்கள் மட்டுமே இருந்தனர். 1050 தொழிலாளர்களில் பெருவாரியான தொழிலாளர்கள் உறுதிமொழிப் பத்திரத்தில் கையெழுத்துப் போட மறுத்து முதலாளி நிர்ப்பந்தமாக கையெழுத்து கேட்கிருர் என்பதை மில் கேட்டிற்கு முன் நின்று கோஷமிட்டு அம்பலப்படுத்தினர். இந்த நிலைமையில் தலையிடுவதற்கு மில் கேட்டிற்கு வந்த லேபர் ஆபீசரிடம்உறுதிமொழி பத்திரத்தில் முதலாளி குறிப்பிட்ட ஒப்பந்தம் தங்களை கட்டுப்படுத்தாது என எழுதி 721 தொழிலாளிகள் கையெழுத்திட்டு லேபர் ஆபீசரிடம்தாவா தாக்கல் செய்தனர்.

முதலாளியின் உறுதிமொழிப் பத்திரத்தில் கையெழுத்திடாதவர்களுக்கு புதிய கார்டு மறுக்கப்படுகிறது என்றும், அவர்கள் வேலைக்கு சென்ற பொழுது நிர்வாகம் அவர்களை தடுத்தார்களென்றும்,அதைத் தாம்பார்த்ததாகவும் புதுக்கோட்டை சப்கலெக்டர் அவர்கள் பதிவு செய்து கையெழுத்திட்டு சங்கங்களிடம் கொடுத்தார்.

சட்டவிரோதமாகவும், நிர்ப்பந்தமாகவும் மில் நிர்வாகம் தொழிலாளர்களிடம் கையெழுத்துப் பெறுகிறுர்கள் என நிரூபிக்கத்தேவையான தஜ்தாவேஜுகள் தயாரான பிறகு இனி கையெழுத்திட்டாலும் அது சட்டப்படியாகாது என்ற நிலை ஊர்ஜிதம் செய்யப்பட்ட பிறகு ஆட்சேபனையுடன் கையெழுத்திட்டு புதிய கார்டு பெற்றுக்கொள்ளலாமென்ற கூட்டு மகாசபையின் முடிவையொட்டி தொழிலாளிகள் ஆட்சேபனையுடன் கையெழுத்திட்டுவிட்டு வேலைக்குச் சென்றனர்.

மில்லை மூடி திணிக்கப்பட்ட 14 மாத பட்டினிக்குப் பிறகும் ஐ. என். டி. யு. சி. ,தி. மு. கழக சங்கத் தலைமைகளின் சீர்குலைவு முயற்சிகளையும் முறியடித்து போலீஸ் அடக்குமுறைகளையும் எதிர்த்து கட்டுப்பாடாகநின்று தங்களின் உரிமைகளைப் பாதுகாத்து வெற்றியுடன் வேலைக்குச் சென்ற எல்லாத் தொழிலாளிகளுக்கும் சிப்பந்திகளுக்கும் வாழ்த்துக்கூறி தோழர்கள் சி. கே ரெங்கசாமி, கே. ஏ. மேனன், எம். ராமச்சந்திரன் ஆகியோர் பஞ்சாலை தொழிலாளர்சங்க சார்பில் அறிக்கை விடுத்துள்ளனர்.

———

# குறிப்புகள்

## உணவு விலையுயர்வும்

## தமிழக அரசின் கொள்கையும்

உணவுப் பொருட்களின் விலைகள் மதுரை நகரிலும் தமிழகம் முழுவதிலும் திடீரென உயர்ந்து; மக்களைப் பெரும் துயரத்திற்கு உள்ளாக்கியுள்ளது உணவுப் பதுக்கல்காரர்களின் திட்டமிட்ட கள்ளமார்க்கெட் வேலையின் விளைவுகள் இவை. அரசாங்கத்தின் தவருன உணவுக் கொள்கையே கள்ளச் சேமிப்பாளர்களின் கொள்ளை லாபச் சதிவேலைகள் ஜரூராக நடத்தப்பட்டு வருவதற்குக் காரணமாகும். தமிழக அரசு, தேவையான உணவைக் கொள்முதல் செய்ய மறுத்தது. மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி கொடுத்த திட்டத்தை ஏற்க மறுத்தது. விளைவு என்ன? கள்ளச் சேமிப்பாளர்களின் கைகள் மேலோங்கின. தேவையான அளவு கொள்முதல் செய்து திருட்டுத்தனமாக சேமித்து வைத்துக்கொண்டார்கள். இவ்வாண்டு உணவு விளைச்சல் அறுவடையாகி மார்க்கெட்டுக்கு வருவதற்குள்ளாகவே சேமிப்பாளர்கள் தங்களுடைய கைவரிசையைக் காட்டிவிட்டார்கள்!

மதுரை நகரிலும், பல இடங்களிலும் ஒரு படி அரிசி ரூ. 3-க்கு வெளி மார்க்கெட்டில் விலை திடீரென உயர்ந்துவிட்டது.

இந்த திடீர் விலை உயர்வுக்கு காரணம் என்ன?

தமிழக அரசு குடும்பக் கார்டுக்கு போடும் 4 அவுன்ஸ் அரிசியை விலை 1 கிலோ 78 காசுக்கும், 85 காசுக்கும் என இரண்டு ரக அரிசி இதுவரையில் விற்று வந்தது. இன்று திடீரென ஒரு கிலோ அரிசி ஒரு ரூபாய் என அதாவது 22 காசு அதிகமாக விற்க முடிவு செய்து விற்பனை செய்து வருகிறது. அதுவும் ஏற்கனவே போட்ட அரிசியா? இல்லை. சாப்பிட முடியாத தூர்நாற்றம் பிடித்த அரிசி. இந்த அளவில் திடீர் உயர்வு செய்தது ஏன்? இது தேவைதானு? இதை எந்த அடிப்படையில் தி. மு. க. அரசு நியாயப்படுத்தப் போகிறது என வினவுகிறோம். அரசாங்கமும் விலைவாசி உயர்வினல் ஏற்பட்டுள்ள மக்களது துயரத்தைக் கணக்கிலெடுத்துக் கொள்ளாமல் அசல் வியாபாரிகளைப்போலவே அரசின் உணவு வியாபாரத்தில் லாபம் சம்பாதிக்க முன்வந்துள்ளதா? இந்தக் கேள்வியினை எழுப்புவதற்கு காரணமுண்டு. உதாரணமாக, தமிழ்நாட்டில் சராசரி 5 லட்சம் டன்தான், அரிசி கொள்முதல் செய்து விநியோகமாகியது என்று வைத்துக்கொள்வோம்' இந்த அளவு அரிசியை—மக்களுக்கு 1 கிலோ அரிசியை 22 காசு என இப்பொழுது விற்பதைவிட, அதிகமாக விலையை உயர்த்தி வைத்து விற்பனை செய்வதால் ரூபாய் 11 கோடி தமிழக அரசிற்குக் கிடைக்கும்! ரூ. 11 கோடிவரைக்கும். ரேஷன் அரிசி வாங்கும் தமிழக மக்கள்மீது தமிழக அரசு விதித்துள்ளபுதிய வரி இது! இது அவசியம் தானு? விளக்கம் கூறியாகவேண்டும். இல்லையெனில் மக்களின் இன்னலைப் பயன்படுத்தி கள்ள மார்க்கெட்காரர்கள் எவ்வாறு திடீரென1படி அரிசி விலைக்கு ரூ. 3 ஆக்கி கொள்ளையடிக்கிருர்களோ, அவ்வாறே தமிழக அரசும் லாபம் சம்பாதிக்க முன் வந்துள்ளதா என்று நினைக்க நேரிடும். இந்த உயர்வினைப்பயன்படுத்திக்கொண்டு தான் ரூ. 2-50க்கு நேற்றுவரை விற்கப்பட்ட அரிசி இன்று திடீரென ரூ. 3 ஆக உயர்த்தப்பட்டுள்ளது.

இதுமட்டுமல்ல, இதுவரையில் நியாயவிலைக் கடைகளில் 1 கிலோ ரவை ரூ. 1-17 காசுக்குக் கிடைத்து வந்தது. இன்று ரவை போடுவதையே அரசின் நியாயவிலைக் கடைகளில் நிறுத்திவிட்டார்கள். இதனல் 1 கிலோவுக்கு ரூ. 1-30 வெளி மார்க்கெட்டில் கொடுத்து வாங்கவேண்டிய நிர்ப்பந்தம் மக்களுக்கு ஏற்பட்டுள்ளது.

இதுபோலவே 1 கிலோ மைதா ரூ. 1-13 காசுக்கு நியாய விலைக்கடைகளில் விற்கப்பட்டு வந்தது நிறுத்தப்பட்டுள்ளதால் மக்கள் வெளிமார்க்கெட்டுகளில் 1 கிலோ ரூ 1-16க்கு வாங்கவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டுள்ளது.

மக்கள் நலனைப் பேணுவதாகக் கூறும் தமிழக அரசு மக்களுக்கு அத்தியாவசியமான உணவுப் பொருள்களின் விலைகளை இவ்வாறு திடீரென உயர்ததியும் தேவையான பலஉணவுப்பொருள்கள் விநியோகத்தை நீக்கியும்மக்களைத் துயரத்தில் ஆழ்த்துவது ஏன்? அரசின் விலைவாசி உயர்வுடன் போட்டி போட்டுக்கொண்டு வெளிமார்க்கெட்டு வியாபாரிகள் பயங்கரமாக விலைகளை உயர்த்தி மக்களைக் கொள்ளை அடிக்க அனுமதிப்பதுதான் மக்கள் நலனைப் பாதுகாப்பதா?

—கே. எம்.

## அறிவிப்பு

### பி. ஆர். மணிவிழா சிறப்புமலர்

அடுத்த வாரம் தீக்கதிர் இதழுடன்

தோழர் பி. இராமமூர்த்தி அவர்களது மணிவிழாச் சிறப்பு மலர்ஒன்றும் வெளிவருகிறது

''மணிவிழா காணும் மக்கள் தலைவர்''

எனும் தலைப்பில் நமது தலைவரின் வாழ்க்கை வரலாறு முழுவதும் வசன கவிதையாக, புரட்சிக் காவியமாக கவிஞர் தோழர் தணிகைச் செல்வன் அவர்களால் இயற்றப்பட்டு அதில் சிறப்பிடம் பெறுகிறது. உணர்ச்சி ததும்பும் வரலாறு, நெஞ்சை அள்ளும் கவிதை!

**4 பக்கங்கள் விலை 10 காசு**

அதிகப் பிரதிகள் வேண்டுவோர் முன்கூட்டியே தெரிவிக்கவும்.

# கேரள மக்களுக்கு திருத்தல்...

(7-ஆம் பக்கத் தொடர்ச்சி)

### முரன்பாடு எழுந்தது ஏன்?

ஐக்கிய முன்னணியின் விரோதிகள்—அதாவது காங்கிரஸ் பெருந்தலைகளும் ஐக்கிய முன்னணியிலுமுள்ள சில கூட்டாளிகளும் நமது கட்சிக்கும், ஐக்கிய முன்னணிக்கும், உள்துறை அமைச்சருக்கும் கெட்ட பெயரை ஏற்படுத்துவதற்காக, கட்சிகளுக்கிடையே நடைபெற்றதாகச் சொல்லப்படும் மோதல்களைப் பயன்படுத்துகிருர்கள், பிரதானமாக நோக்குமிடத்து, இந்த மோதல்களெல்லாம் நமது கட்சிக்கும் இதர கட்சிகளுக்குமிடையே அவ்வளவு பெரிய பிணக்கு அல்ல என்பதையும்—நிலப்பிரபுக்களும் மற்றுமுள்ள சுரண்டல் வர்க்கங்களும் விவசாயிகள்மீதும் பொதுமக்கள் மீதும் தொடுக்கும் தாக்குதல்தான் பிரதான முரண்பாடாக இருக்கின்றது என்பதனைத் தெட்டத்தெளிவாகத் தெரிந்துகொள்ள வேண்டும். ஐக்கிய முன்னணியில் உள்ள சில கட்சிகள் இந்த சுரண்டல் வர்க்கங்களுடன் உறவு பூண்டுள்ளன. அவைகள் குண்டர்களை ஏவிவிட்டு, நமது தலைமையில் முன்னேறிக் கொண்டிருக்கும் மக்களைத் தாக்குவதற்கு ஏற்பாடு செய்கின்றன. இப்படிச்செய்துவிட்டு, இந்த மோதலை, ஐக்கிய முன்னணிக்கட்சிகளுக்கிடையே நடைபெறும் மோதல்களாகச் சித்தரிக்கிருர்கள்.

### மே. வங்கத்தில் போலீஸ் தலையீடு இல்லை.

மேற்குவங்க உழைப்பாளி மக்கள் இந்த அவதூறுப்பிரச்சாரத்துக்கு ஒவ்வொரு நாளும் பதில் அளிக்கிருர்கள். ஆனல் அவதூறு செய்பவர்கள் முதலாளித்துவப் பத்திரிகைகளைப் பயன்படுத்தி தொடர்ந்து அவதூறுப்பிரச்சாரத்தை நடத்திக்கொண்டுதானிருக்கிருர்கள். தேர்தல் வெற்றியால் உற்சாகமுற்ற 2 லட்சம் சணல் ஆலைத்தொழிலாளர்களும், 1 லட்சம் தேயிலைத் தோட்டத்தொழிலாளர்களும், 50 ஆயிரம் பஞ்சாலைத் தொழிலாளர்களும் வெற்றிகரமான போராட்டங்களை நடத்தி, ஐக்கிய முன்னணி அமைச்சரவையின் உதவியுடன் கணிசமான அனுகூலங்களை அடைந்துள்ளார்கள். பல்லாயிரக்கணக்கான இன்ஜினீயரிங் தொழிலாளர்களும் மற்றும் பல்வேறு தொழிலாளர்களும் கூட பெரும் வெற்றிகளை அடைந்துள்ளனர் இவ்வளவு பெரிய வெற்றிகளை, கூட்டம் கூட்டமாகச் சிறைக்குள் தள்ளப்படாமல், தடியடிக்கு இரையாக்கப்படாமல், போலீஸ் துப்பாக்கிக் குண்டுகளுக்குப் பலியாக்கப்படாமல், பாதுகாப்புச் சிறைகளில் அடைக்கப்படாமல், அடைந்திருக்கிருர்கள். ஐக்கிய முன்னணி அரசின் உதவியோடு மேற்கு வங்க உழைப்பாளி வர்க்கம் எவ்வித போலீஸ் தலையீடுமின்றி இத்தகைய முன்னேற்றங்களைப் பெற்ருர்கள். முதலாளிகளிடம் கைக்கூலிபெற்ற கும்பல்தான், இந்த முன்னேற்றங்களை 'சட்டமும் ஒழுங்கும் நிலை குலைந்துவிட்டது'' என்று ஓலமிடுகிருர்கள். அப்படிப்பட்ட கும்பல் மேற்கு வங்கத்தில் குறிப்பிட்ட வட்டாரங்களில் குறிப்பிட்ட அளவு இருக்கத்தான் செய்கிருர்கள்.

### விவசாயிகளுக்கு வாழ்த்து

வெற்றிகளைப்பெற்ற தொழிலாளி வர்க்கத்தை பொலிட்பீரோ வாழ்த்துகிறது. தொழிலாளர்களை வெற்றிகரமாகப் பாதுகாத்த—தங்களு ஜனநாயக, பொருளாதாரக் கோரிக்கைகளைப் பெறுவதற்காகப் போராடும் மக்களுக்கு எதிராக அடக்குமுறை இயந்திரத்தைப் பயன்படுத்தக்கூடாது என்ற தனது அடிப்படைக் கொள்கையில் உறுதியாக நிலைநின்ற—ஐக்கிய முன்னணி அமைச்சரவைக்கும் பொலிட்பீரோ வாழ்த்துக் கூறுகிறது சட்ட விரோதமாக நிலங்களை ஆக்கிரமித்துக் கொண்டிருந்த நிலப்பிரபுக்களிடமிருந்து, பல்லாயிரக் கணக்கான ஏக்கர் நிலங்களைக் கைப்பற்றிக்கொண்ட மேற்கு வங்க விவசாயிகளுக்கும் பொலிட்பீரோவாழ்த்துக்கூறுகிறது. ஆதோ! மராட்டிய மாநிலத்தில் காங்கிரஸ் அரசு. நிலத்திலிருந்து விவசாயிகளை வெளியேற்ற முனைந்தது. விவசாயிகளின் எதிர்ப்பு ஏற்படவே, வெளியேற்ற உத்தரவை வாபஸ் வாங்கிக்கொண்டது. தவருன நடவடிக்கை எடுத்த அந்த மராட்டிய மாநிலத்தையும் அதுபோன்ற ஏனைய காங்கிரஸ் மாநிலங்களையும்போல் அல்லாமல் மேற்குவங்க அரசு. வேறு மாதிரியாக நடந்துகொண்டது.

### சீர்குலைவாளரின் கூப்பாடு

மேற்குவங்க அமைச்சரவையின் இந்த நடவடிக்கைகளானது மக்களிடையே ஒரு பதிய எழுச்சியை உண்டாக்கியிருக்கிறது. ஐக்கிய முன்னணியின் அடித்தளத்தை விரிவபடுத்தி அகலப்படுத்கியிருக்கிறது; நமது கட்சியின் கௌரவத்தை உயர்த்தியிருக்கிறது. ஒன்றன்பின் ஒன்ருகக் கிடைக்க இந்த வெற்றிகளின் மக்கியில்தான்—இந்த வெற்றிகளுக்குப் பிரதான கருவியாக விளங்கிய நமது கட்சியின்மீது, அவதூறுக் கூப்பாடுகளைப் போடுகிருர்கள். சட்டத்துக்கு ஆபத்து. ஒழுங்குக்கு ஆபத்து என்று அவர்கள் போடும் கூப்பாடுகளெல்லாம், சுரண்டல் வர்க்கங்கள் வழக்கம்போல எழுப்பும் கூப்பாடுகளேயாகும். இந்தக் கூப்பாடுகளெல்லாம் வேறொன்றுமல்ல. பொதுஜன உரிமைகளை விரிவுபடுத்தவேண்டுமென்ற அமைச்சரவையின் கொள்கையை எதிர்க்கு எழுப்பப்படும் கூப்பாடுகளேயாகும்; பொது மக்களை ஒடுக்க அமைச்சரவை மறுப்பதைக் கண்டிப்பதற்காக எழுப்பப்படும் கூப்பாடுகளேயாகும்.

பங்களா காங்கிரசின் அறிக்கையையும், இதர கட்சிகள் அண்மையில் தொடுத்துள்ள தாக்குதல்களையும் அலட்சியமாக விட்டுவிடக்கூடாது என்று பொலிட்பீரோ ஜனநாயக சக்திகளை எச்சரிக்கிறது. இவையெல்லாம் கட்சிக் குரோதங்களினல், எழுந்த வெறும் வாய்ப்பேச்சுத் தாக்குதல்கள் அல்ல. ஐக்கிய முன்னணிக்குக் குழி பறிக்கும் கடும் முயற்சிகளாகும்! பொது ஜன சக்திகள் மேலும் வெற்றிகளைச் சம்பாதிக்காதபடி, மிக்க அக்கரையோடு அதைக் கெடுக்கும் முயற்சிகளேயாகும். ஆம்! இதே மாதிரியான போக்கில்தான், கேரளத்தில் ஐக்கிய முன்னணியையே தகர்த்து விடக்கூடிய தொல்லைகள் ஆரம்பமாயின.

### பொலிட்பீரோவின் அறைகூவல்!

பொலிட்பீரோ மேற்கு வங்க மக்களை அறை கூவி அழைக்கிறது; காலா காலத்தில் தலையிடுங்கள்! உங்களின் குரலை எழுப்புங்கள்! ஐக்கிய முன்னணிக்கு எதிராக வளர்ந்து வரும் சதிகளுக்கு முற்றுப்புள்ளி வையுங்கள்! மக்களால் வெறுத்து ஒதுக்கப்பட்ட காங்கிரசை முறியடிக்கக் கூடிய ஒரே ஆயுதம்ஐக்கிய முன்னணி. அந்த ஆயுதத்தை

(12-ஆம் பக்கம் பார்க்க)

# பஞ்சாலை சம்பள போர்டு தீர்ப்பின் மாபெரும் மோசடி!

## பிற்போக்குத் தொழிற்சங்கத் தலைவர்களின் துரோகம்

இரண்டாவது பஞ்சாலை சம்பள போர்டு தீர்ப்பு வெளியிடப்பட்டுள்ளது அனைவரும் அறிந்ததே. ஆவலோடு எதிர்பார்த்திருந்த தொழிலாளிகளுக்கு அது பெரும் ஏமாற்றத்தையளித்துள்ளது. 1956ம் வருடம் வேலைப்பளு நிர்ணயம் —சம்பள நிர்ணயம் பற்றி தொழிற்சங்கங்களும் தென் இந்திய மில் முதலாளிகள் சங்கமும் செய்துகொண்ட ஒப்பந்தத்திற்குப்பின் 1957 மார்ச்சு மாதம் 30-ஆம் நாள் இந்திய அரசு முதல் சம்பள போர்டை நியமித்து அதன் தீர்ப்பை மூன்று வருடங்களுக்குப்பின் 1960 மார்ச்சு 2-ம் இந்திய அரசு வெளியிட்டது ஒவ்வொரு தொழிலாளிக்கும் ரூ. 10 அடிப்படைச்சம்பள உயர்வு கிடைத்தது 1960 ஜனவரியிலிருந்து அது அமுலாகியது. மறுபடியும் 1964 ஆகஸ்ட் 12-ல் இரண்டாவது சம்பள போர்டு அமைக்கப்பட்டு நான்கு வருடங்களுக்குப்பின் 1968 டிசம்பர் மாதத்தில் அதன் ரிப்போர்ட் அரசாங்கத்துக்கு சமர்ப்பிக்கப்பட்டது. இந்திய அரசு அதை ஏற்றுக்கொண்டு வெளியிட்டது. 1969 ஜனவரி மாதத்திலிருந்து இந்த சிபார்சுகள் அமுலாக்கப்படவேண்டுமென்பது முடிவு.

### சம்பள போர்டின் விபரீதப் போக்கு

முதலாவது சம்பளபோர்டு அமைக்கப்பட்டதிலிருந்து 1969 வரை 12 ஆண்டு காலத்தில் தமிழக பஞ்சாலைத் தொழிலாளர்களுக்கு கிடைத்துள்ள சம்பள உயர்வு தலைக்கு 10 ரூபாய் மட்டும்தான்! இரண்டாவது சம்பளபோர்டு அடிப்படைச் சம்பளத்தில் எந்த உயர்வும் கொடுப்பதற்கில்லையென்று கூறிவிட்டது. தொழிலாளர்களின் சம்பளங்களை, நியாயச்சம்பளக் கோட்பாட்டினடிப்படையில் பரிசீலித்து முடிவு செய்ய நியமிக்கப்பட்ட சம்பள போர்டு சம்பள உயர்வே தேவையில்லை என்று முடிவு செய்திருப்பது எவ்வளவு பெரிய மோசடி அநீதி என்பது எளிதில் புரிந்துகொள்ளலாம். முதல் சம்பள போர்டின் தீர்ப்புகளை முழுமையாகவும் பிசகற்ற முறையிலும் அமுலாக்குவதைத்தான் தங்கள் பிரதானமாகக் கவனத்தில் கொண்டுள்ளதாகக் கூறுகிறார்கள். அப்படியாயின இரண்டாவது சம்பளபோர்டு அமைக்கப்பட்டதற்கு அர்த்தமேயில்லை என்றாகிறது. சென்ற ஒரு நூற்றாண்டு காலமாக பஞ்சாலை தொழிலாளிகளைச் சுரண்டிக் கொழுத்துள்ள பஞ்சாலை முதலாளிகளின் வாதங்களை அப்படியே நடைமுறையில் ஏற்றுக்கொண்டு. தொழிலாளர்களுக்கு பெரும் அநீதி இழைத்துள்ளது சம்பள போர்டு சிபார்சுகள். தமிழகத்தில் உள்ள பஞ்சாலை தொழிலாளிகளுக்கு இன்னும் ஐந்தாண்டுகளுக்கு ஒரு பைசாவும் சம்பள உயர்வில்லை. அதாவது முதல் சம்பள போர்டு அமைக்கப்பட்ட 1957-லிருந்து இரண்டாவது சம்பள போர்டு சிபாரிசுகளின் காலகெடு முடிவடைகிற 1973-ஆம் வருடம் முடியும் வரை உள்ள 17 ஆண்டுகளுக்கு வெறும் 10 ரூபாய் சம்பள உயர்வுதான், தமிழக பஞ்சாலை தொழிலாளர்களுக்கு சுதந்திர இந்தியாவில் கிடைத்துள்ள சலுகையாகும். இந்திய அரசினுடைய,

**கே. ரமணி** எம். பி.

இந்திரா காந்தி அம்மையாருடைய ஜனநாயக சோஷலிச நடைமுறைதானிது.

### வங்க வழியில்

நாடெங்கிலும் பல பகுதிகளில் பஞ்சாலைத் தொழிலாளிகள் இந்தத் தீர்ப்பை நிராகரித்துவிட்டார்கள். அகில இந்திய தொழிற்சங்கக் காங்கிரசும் இதை நிராகரித்துள்ளது. மேற்கு வங்கத்தில் 55 000 பஞ்சாலை தொழிலாளர்கள் ஒன்றுபட்டுப்போராடி இரண்டாவது சம்பள போர்டு சிபார்சுகளை தூக்கி எறிந்துவிட்டு ரூ.20 அடிப்படைச்சம்பள உயர்வைப் பெற்றுவிட்டார்கள். அதேபோல் தமிழகத்திலும், மற்ற பகுதிகளிலும் பஞ்சாலைத் தொழிலாளர்கள் அடிப்படைச் சம்பள உயர்வு கோரி போராடி சம்பள உயர்வு பெறவேண்டியுள்ளது. சம்பள போர்டு நாடகத்தை நடத்தி பஞ்சாலை தொழிலாளிகளுக்கு சம்பள உயர்வே இல்லாது செய்த அநீதியை அனுபதிக்க முடியாது. விலைவாசி உயர்வு, வேலையில்லாத திண்டாட்டம், வேலைப்பளு உயர்வு ஆகிய கொடுமைகளால் நசுக்கப்பட்டு பஞ்சாலைத் தொழிலாளர்கள் குமுறிக்கொண்டிருக்கிறார்கள்!

### ஐ என். டி. யூ. சி. யின் துரோகம்

இந்தச் சூழ்நிலையில் தான் தமிழகத்தில ஐ. என். டி. யூ. சி, சம்பள போர்ட தீர்ப்பை அமுலாக்கும்படி கோரிக்கை வைத்து பொது வேலை நிறுத்தத்துக்கு அறைகூவல் விட்டது. இந்த சம்பள போர்டில ஐ என். டி. யூ. சி. பிரதிநிதியுமிருந்துதான இந்த மோசடித்



தீர்ப்பை வெளியிட்டார்கள். காங்கிரஸ் அரசுக்கும், இந்திய முதலாளி வர்க்கத்துக்கும் சேவை செய்யப் பிறந்துள்ள ஐ. என். டி. யூ சி. தொழிலாளி வர்க்கத்துக்குச் செய்து வரும் துரோகங்கள் யாவருமறிந்ததே. அந்தச் சைங்சரியத்தை நடத்தி எவருக்கும் முறையில் தான் சம்பள போர்டு தீர்ப்பை அமுலாக்கக் குரல் கிளப்பினார்கள். சம்பள போர்டு தொழிலாளர்களுக்குச் செய்துள்ள அநீதி சம்பளத்தை உயர்த்த மறுத்துள்ளது பற்றி அவர்களுக்கு கவலையில்லை. சம்பள போர்ட தீர்ப்பைத் தூக்கி எறிந்துவிட்டு அடிப்படைச் சம்பளத்தை உயர்த்தக் கோரி ஒன்றுபட்ட போராட்டத்துக்கும் அவர்கள் தயாரில்லை என்பது தெளிவு. அவர்களின் அறைகூவல் உண்மையில் போராட்டம் நடத்துவதற்கல்ல. முதலாளிகளுடன் சமரசம் பேசுவதற்கான ஒரு தந்திரமென்பதை யாவருமறிவர். இந்த துரோகப் படலத்தில் எச். எம். எஸ். தி. மு. க. சங்கங்களும் சேர்ந்துகொண்டார்கள். தொழிலாளர்களுக்கு ஏற்பட்டுள்ள பெரும் ஏமாற்றத்தைப்பற்றி யாதொரு கவலையும் கொள்ளாமல் இச்சங்கங்கள் தென் இந்திய மில் முதலாளிகள் சங்கத்துடன் சமரசப் பேச்சிலிறங்கினார்கள் இறுதியில் ஒரு துரோக ஒப்பந்தத்தையும் செய்துகொண்டார்கள். அந்த ஒப்பந்தத்தின் முக்கிய அம்சங்களாவன:—

**பஞ்சப்படி:**

1968-ஆம் வருடம் தொழிலாளர்களுக்குக் கொடுக்கப்பட்ட சராசரி மாத பஞ்சப்படி ரூ. 139-01 ஆகும். ரூ 140-க்கும் இதற்கும் உள்ள வித்தியாசத்தொகையான 99 பைசாவை ஒரு ரூபாயாக எல்லாத் தொழிலாளர்களுக்கும் கூடுதல் பஞ்சப்படி என்று 1—1—69 முதல் கொடுக்கப்படும்.

**சம்பளத்துடன் பஞ்சப்படி இணைப்பு:**

1959 ஆம் வருடம் முதல் ஆறு மாதங்களில் சராசரி கொடுக்கப்பட்ட பஞ்சப்படியின் மூக்கால் பாகம் ரூ. 45 ஆகும். இதில் சுலபமாக கணக்குப் போடும் வசதியை உத்தேசித்து ரூ 44-98ஐ மட்டும் 1—1—69 முதல் அடிப்படை சம்பளத்துடன் இணைக்கப்படும். இதன்படி 1—1—69 ஆம் தேதி முதல் அடிப்படைச் சம்பளமானது, 1—1—60-க்கு முன்பிருந்த சம்பளமும், முதல் சம்பள போர்டு கொடுத்த ரூ 10-00-ம் இப்போது இணைக்கப்படும் இந்த ரூ. 44-98-ம் சேர்ந்ததாகும்

**திருத்தி அமைக்கப்பட்ட சம்பளம் உற்பத்தியுடன் இணைப்பது:**

1—1—69 முதல் தற்போது அமுலில் உள்ள வேலை அளவை திருத்தி அமைக்கப்பட்ட சம்பளங்களுடன் இணைக்கப்படும். எங்கெல்லாம் அதிக வேலைக்கு அதிகச் சம்பளம் கிடைத்து வருகிறதோ அந்த விகிதத்தை அந்த அதிகச் சம்பளம் கிடைக்கும் முறையில் திருத்தி அமைக்கப்பட்டோ அல்லது திருத்தியமைக்கப்பட்ட சம்பளமோ எது அதிகமோ அது கொடுக்கப்படும். சிபாரிசில் உள்ள வருடாந்தர சம்பள உயர்வை பீஸ் ரேட் நிர்ணயிக்கும் கணக்கில் சேர்க்கப்படமாட்டாது. இதை அமுலாக்குவதில் ஏற்படும் கஷ்டங்களை இருசாராரும் கலந்து பேசி ஒரு மாதத்துக்குள் தீர்க்கப்படும்.

**வருடாந்தர சம்பள உயர்வு**

திருத்தி அமைக்கப்பட்ட சம்பள திட்டப்படி 1—1—69 ஆம்தேதி முதல் ஒரு சதம் வருடாந்தர சம்பள உயர்வு எல்லாத் தொழிலாளர்களுக்கும் கொடுக்கப்படும். தற்போது டைம் ஸ்கேலில் இல்லாத எல்லா தொழிலாளர்களையும் டைம் ஸ்கேலுக்குள் கொண்டு வரப்படும். இந்த சம்பள உயர்வு குறைந்தபட்சம் மாதம் 1-04 பைசாவாக இருக்கும். இவ்வாறு கணக்கிடப்பட்ட வருடாந்தர சம்பள உயர்வு ஐந்து வருட காலங்களுக்குக் கொடுக்கப்படும். இந்த வருடாந்தர சம்பள உயர்வுக்குத் தகுதிபெற ஒரு தொழிலாளி ஒரு வருடத்தில் குறைந்தது 240 நாட்கள் வேலை செய்திருக்கவேண்டும். நாட்கள் கணக்குக் கூட்டுவது போனஸ் சட்டப் ஷரத்து 14ன்படி செய்யப்படும்

**கிராஜுவிட்டி;**

1—1—69 ஆம் தேதி முதல் தற்போதுள்ள கிராஜுவிட்டி திட்டத்தின்படி கொடுக்கப்படும் தொகையில் 25 சதம் உயர்த்தப்படும். அடிப்படை சம்பளத்துடன் இணைக்கப்பட்ட பஞ்சப்படியை கிராஜுவிட்டி கணக்கில அடிப்படை சம்பளமாக சேர்த்துக்கொள்ளப்படமாட்டாது வேறு வார்த்தைகளில் சொன்னால், திருத்தியமைக்கப்பட்ட அடிப்படைச் சம்பளத்திலிருந்து இணைக்கப்பட்டுள்ள பஞ்சப்படி (ரூ. 44-98ஐ கழித்துவிட்டுத்தான கிராஜுவிட்டி கணக்கிடப்படும்.

**சிக்கனச் சீரமைப்பு:**

தமிழக அரசிடம் இருசாராரும் நிரந்தர நிபுணர் குழுவை அமைக்க கேட்டுக்கொள்வார்கள். அக்கமிட்டியில் தொழிலாளர் இலாகாவைச் சேர்ந்த உதவி லேபர் கமிஷனர் அந்தஸ்துக்குக் குறையாத ஒருவர் சேர்மனாகவும், இருவர் கோவை தென் இந்திய பஞ்சாலை ஆராய்ச்சிக் கழகத்தைச் சேர்ந்தவர்களுமாக இருப்பார்கள். அதில் ஒருவர் பஞ்சாலைத் தொழில் நுணுக்க நிபுணரும், மற்றவர் தொழில் என்ஜினீயருமாக இருப்பார்கள். ரேஷனலைசேஷன் பற்றிய தாவாக்களை அக்கமிட்டிக்கு சம்பந்தப்பட்ட நிர்வாகத்தினர், அல்லது சங்கம் அல்லது சங்கங்களால் தாக்கல் செய்யப்படும் கமிட்டியின் முடிவு இறுதியானதும், மில் மேனேஜ்

(11-ஆம் பக்கம் பார்க்க)

---

## இந்திரா காந்தி மீது வலதுசாரிகளின் துதிபாடல்!

"...இந்திய கூட்டணி சரித்திரத்தில் காங்கிரசின் நீண்ட வரலாற்றில் கொள்கை அடிப்படையில் அமைதியான இக்கலகம் போல் என்றும் நடந்ததில்லை......

இரு துருவநிலை, அரசியல் பிரிவினை, ஜனாதிபதி தேர்தலும் தீர்க்க மாயிற்று

முற்போக்கும் பிற்போக்கும் மோதிற்று முற்போக்கு வென்றது.

கிரியின் வெற்றி, அடுத்துவர விருக்கும் பல முற்போக்கு சாதனைகளுக்குக் கட்டியம் கூறுகிறது

—ஜனசக்தி

24—8—69

# பஞ்சாலை சம்பள போர்டு......

(10–ஆம் பக்கத் தொடர்ச்சி)

மெண்டாரையும், தொழிலாளர்களையும் கட்டுப்படுத்துவதுமாகும். தாவா கொடுக்கப்பட்ட மூன்று மாதத்துக்குள் சாதாரணமாக கமிட்டி முடிவு கொடுக்கப்படும்.

இதன்படி தொழிலாளர்களுக்கு கொடுக்க வேண்டிய மிச்சப் பணத்தை 31-12-69க்குள் கொடுக்கப்படும். அநுபந்தம் Bயில் உள்ள மில்களில் இதை அமுலாக்குவது பற்றி இருசாராரும் 1-11-69தேதிக்குள் பேசுவார்கள். இந்த ஒப்பந்தம் 1—1—69 ஆம்தேதி முதல் 5 வருடங்களுக்கு அமுலிலிருக்கும். சம்பள போர்டின் சிபார்சுக்குள் வந்துள்ள எந்தப் பிரச்னை பற்றியும் மறு பரிசீலனை கோரப்பட மாட்டாது. இந்த ஒப்பந்தமானது இரண்டாவது சம்பள போர்டு சிபார்சின் கீழ் இருதரப்பாருக்கு முள்ள உரிமைகள், கடமைகள் பற்றி பூரண திருப்தியுடன் முழுமையானதும், இறுதியானதாகவும் ஏற்பட்டதென்று ஒப்புக் கொள்ளப்படுகிறது.

## ஏமாற்று வித்தை

இந்த ஒப்பந்த ஷரத்துக்களைப் பார்த்தாலே எவ்வளவு மோசமானது என்பது எளிதில் புரியும். அடிப்படைச் சம்பளம் ஒரு காசுகூட உயர்த்தப்படவில்லை. பஞ்சப்படியில் ரூ. 44.98ஐ சம்பளத்துடன் இணைப்பது ஒரு ஏமாற்றுவித்தையாக முடிந்துள்ளது அதன் மூலம் முக்கியமாகக்கிடைக்க வேண்டிய சலுகை தொழிலாளி வேலையிலிருந்து நீங்கும்போது கிடைக்கிற கிராஜுவட்டிக்கு பயன்படவேண்டும் என்பதாகும். அவ்வாறு சேர்க்கப்பட மாட்டாதென்று தெளிவாக அழுத்திக்கூறிவிட்டார்கள். வருடாந்திர சம்பள உயர்வு ஒரு சதம், குறைந்தது 104 பைசா அத்துடன் ரூ. 140-க்குக் குறையாத பஞ்சப்படி கொடுக்கப்படவேண்டுமென்பதில் ஒரு தொழிலாளிக்கு ஒரு ரூபாய் அதிகம் கிடைக்கும். இந்த இரண்டும் சேர்த்து இரண்டு ரூபாய் ஒரு தொழிலாளிக்குக கிடைக்கும்! இது தான் சம்பள போர்டின் சாதனை! இதற்காகத்தான் இந்த பிற்போக்குத் தொழிற் சங்கத்தலைவர்கள் ஒப்பந்தம் செய்து 1973ஆம் வருடம் முடிய ஐந்து வருடங்களுக்கு கோரிக்கைகளைய கேட்கமாட்டோம் என்று தொழிலாளிகளின் உரிமைகளை அடகு வைத்துள்ளார்கள். இதற்காக ஐந்தாண்டுகளுக்கு தொழிலாளர்கள் போராடவும் கூடாதென்று கையையும், காலையும் கட்டிப் போடுவதற்காகவே இந்த ஒப்பந்தம் செய்துள்ளார்கள்

## துரோகமும்பேராபத்தும்

அதே சந்தர்ப்பத்தில், சிக்கனச்சீரமைப்பு நடத்தவும், அதற்கு முதலாளிகளின் பிரதிநிதிகளை மட்டும் கொண்ட கமிட்டி அமைத்து நிறைவேற்றவும் உற்பத்தியை சம்பளத்துடன் இணைத்துக்கொள்ளவும் ஒப்புக்கொண்டு வேலைப் பளுவை இஷ்டம்போல் திணிக்கவும், ஏற்கனவே திணித்துள்ளதை நிரந்தரமாக்கவும், முதலாளிகளுக்கு பூரண உரிமை அளிக்கப்பட்டுள்ளது. இதன் மூலம் சம்பளத்துடன் இணைக்கப்படும் 44·98 பைசா பஞ்சப்படியிலிருந்தும், உற்பத்தி குறைந்தால் சம்பளம் வெட்டப்படும் ஆபத்து தொழிலாளர் தலைமீது விழுந்துள்ளது! உற்பத்தியை பஞ்சப்படியோடு இணைத்து உற்பத்தி குறைந்தால் பஞ்சப்படியை வெட்டும் அக்கிரமத்தை நாளதுவரை தொழிலாளி வர்க்கம் அனுமதித்ததில்லை. இப்போது அதற்கும் இந்த பிற்போக்கு தொழிற்சங்கவாதிகள் விட்டுக் கொடுத்து துரோகம் செய்துள்ளார்கள்.

அதேபோல் கிராஜுவட்டி திட்டத்திலும் பெரும் துரோகத்தை இழைத்துள்ளார்கள். சம்பள போர்டின் சிபார்சில், "தற்போது அமுலில் உள்ள கிராஜுவட்டி திட்டத்தின் அடிப்படையில் 25 சதம் உயர்வு கொடுக்க வேண்டு" மென்று பொதுவில் தான் கூறப்பட்டுள்ளதே தவிர, அடிப்படைச் சம்பளத்துடன் இணைக்கும் பஞ்சப்படியை நீக்கிவிட்டுத்தான் கிராஜுவட்டி கணக்கிடப்பட வேண்டுமென்று கூறவில்லை. அப்படியிருந்தும் இந்த ஒப்பந்தத்தில் முதல் போர்டு தீர்ப்புப்படி இன்று கிடைக்கிற அடிப்படைச் சம்பளத்தை மட்டும் கணக்கிட்டு கிராஜுவட்டி கிடைத்தால் போதுமென்று ஒப்புக்கொண்டு இவர்கள் ஒப்பந்தம் செய்திருக்கிறார்கள். தமிழகத்தில் உள்ள பஞ்சாலைத் தொழிலாளர்கள் மத்தியில் கடுமையான பிளவை வளர்த்துவிட்டு பற்பல சங்கங்களை உற்பத்தி செய்துவிட்டு, ஒற்றுமை சேர்ந்து முதலாளி வர்க்கத்தின் சுரண்டலை தாக்குதலை எதிர்க்க சக்தியில்லாமல் செய்துவிட்டு இப்போது இந்த ஒப்பந்தத்தையும் அவர்கள் தலைமீது சுமத்தியுள்ளார்கள். மில் முதலாளி நினைத்ததை நிறைவேற்றிக்கொடுத்துள்ளார்கள்!

பஞ்சாலைத் தொழிலாளிகள் இதை நிச்சயம் சகித்திருக்கப் போவதில்லை வங்கத்திலுள்ள சகோதர பஞ்சாலைத் தொழிலாளர்களும், சணல் தொழிலாளிகளும், தேயிலை தோட்டத்தொழிலாளிகளும், ராஜஸ்தானிலும், கோவையிலுமுள்ள எஞ்ஜினீயரிங் தொழிலாளர்களும், சர்க்கரை மில் தொழிலாளர்களும், கேரளத்திலும், தமிழ தமிழகத்திலுமுள்ள லட்சக் கணக்கான விவசாயத் தொழிலாளர்களும், போராடி அடிப்படைச் சம்பளத்தையே உயர்த்தி வாங்கியுள்ளதைப் பார்த்த பின் சும்மா இருக்கப் போவதில்லை. கோவையிலும், திருச்சியிலும், குடியாத்தத்திலும், சேலத்திலும், மதுரையிலும், சிங்கையிலும், சென்னையிலும் உள்ள பஞ்சாலைத் தொழிலாளர்கள் வீரமிக்க போராட்டங்களை நடத்தி வளர்ந்த பாரம்பரியம் உள்ளவர்கள். சதிகள், துரோகங்கள் அடக்கு முறைகள், பிரித்தாளும் சூழ்ச்சிகள் யாவற்றையும் பார்த்து அனுபவித்து சமாளித்து முன்வநதவர்கள்.

## உரிமைதனைப் பாதுகாப்போம்

ஆகவே முதலாளிகளும், பிற்போக்கு வாதிகளும் கூட்டுச் சேர்ந்து செய்துள்ள இந்த ஒப்பந்தத்தை உடைத்தெறியவும், அடிப்படைச் சம்பள உயர்வு, முழு பஞ்சப்படி போதுமான கிராஜுவட்டி பெறவும், பூட்டிய மில்களைத் திறக்கவும், சம்பள வெட்டையும், பாதிக் கூலிக்கு வேலை வாங்கும் அக்கிரமத்தையும் முறியடிக்கவும், இதுவரையில் போராடிப் பெற்றுள்ள எந்த உரிமைகளையும் பறிக்க விடாமல் பாதுகாக்கவும், முன் காலத்தில் பெற்றது போல் அதிக போனஸ் பெறவும், முதலாளிகள் இஷ்டப்படி வேலைப் பளு உயர்த்துவதை எதிர்த்து முறியடிக்கவும் போராடியே தீருவார்கள். தொழிலாளர்கள் குமுறிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களின் ஒற்றுமை சிதறடிக்கப் பட்டுள்ளதால் வேதனையடைந்து, மனம் வெந்துள்ளார்கள். வெந்த புண்ணில் பாய்ச்சப்பட்ட வேலாக இந்த ஒப்பந்தம் வந்துள்ளது. ஆகவே இது நீடிக்காது.

## ஒன்றுபடுவோம் போராடுவோம்

இந்த துரோக ஒப்பந்தத்தில் கோவை ஜில்லா மில் லேபர் யூனியனும், கோவை ஜில்லா மில் தொழிலாளர் சங்கமும் கையெழுத்திட மறுத்துள்ளனர். தொழிலாளர்களிடம் உண்மைகளை எடுத்துக் கூறி பேலே கண்ட கோரிக்கைகளை அடைய சகல தொழிலாளர்களையும் அணுகி, திரட்டிப் போராட இயக்கத்தைநடத்தி வருகிறார்கள் ஒற்றுமையைக் கட்ட உழைத்து வருகிறார்கள்! வெற்றி காண்பார்கள்! தமிழகம் எங்குமுள்ள பஞ்சாலைத் தொழிலாளர்களுக்கே ஏற்பட்டுள்ள இந்த ஆபத்தை எதிர்த்துப் போராட அனைத்துத் தொழிலாளர்களும் அணி வகுத்து வாருங்கள்! என்று அறை கூவல் விடுக்கின்றோம்.

---

# தி. மு. க.வும் அரிஜன விவசாயியும்

மதுரை மாவட்டம் அல்லி நகரத்தைச் சேர்ந்த ஏழை அரிஜன விவசாயியான அக்கினி என்பவர், ஆண்டிபட்டியைச் சேர்ந்த நிலச்சுவான்தார் வெள்ளையன் செட்டியாருக்குச் சொந்தமான தேனியிலுள்ள வயலில் பல வருடங்களாக விவசாயம் செய்துகொண்டு வருகிறார். அவரை, எவ்வித காரணமுமின்றி — சட்டத்திற்கும், நியாயத்திற்கும் முரணாக நிலச்சுவான்தார் வெள்ளையன் செட்டியார், நிலவெளியேற்றம் செய்ய எத்தனித்தார்.

இதை அல்லிநகரம், தேனி மார்க்ஸிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிக்கிளைகளும், அல்லிநகரம் விவசாயிகள் சங்கமும் நிலச்சுவான்தாரின் ரௌடிஸ அச்சுறுத்தலுக்கும், போலீசுக்கும் அஞ்சாது உறுதியாக எதிர்த்துப் போராடியதின் மூலம், நிலவெளியேற்றம் தடுக்கப்பட்டது, ஏழை அரிஜன விவசாயி அக்கினி பாதுகாக்கப்பட்டார்.

இதற்கிடையே, நிலச்சுவான்தாருக்கு ஆதரவாக தேனி நகர் முக்கியமான தி. மு. க. தலைவர் ஒருவர் விவசாயி அக்கினியைத் தனியே அழைத்து, பண ஆசை காட்டியதாகவும், ரௌடிகளைக் காட்டி மிரட்டியதாகவும் கூறப்படுகிறது. ஆனால், மார்க்ஸிஸ்ட் வழிகாட்டுதலைப் பெற்றுள்ள அக்கினி, அந்தரௌடிஸ மிரட்டலுக்கும் பண ஆசைக்கும் சிறிதும் மசியவில்லை.

---

# இந்திராவின் தேரோட்டிகள்

**"பாரதப்போரில் அர்ச்சுனனுக்கு கண்ணன் தேர்ச்சாரதியாக இருந்தார் வெற்றிமேல் வெற்றி கிடைத்தது அதுபோல் நாங்கள் பிரதமருக்கு (இந்திராவுக்கு) தேர்ச் சாரதிகளாக இருக்கிறோம் இதனால் பிரதமருக்கு வெற்றிமேல் வெற்றி கிடைக்கிறது."**

—திருச்சி திருவரம்பூர் பொதுக்கூட்டத்தில் வலது சாரித் தலைவர் பாலதண்டாயுதம் பேசியது.

—தினமலர்
10–10—69

(தோழர் பாலதண்டாயுதம் வலதுசாரிகளின் தமிழ் மாநில செயற்குழு உறுப்பினர் ஆவார்.)

## தேரோட்டியின் தெளிவுரை

"காங்கிரசிலுள்ள பிற்போக்குக் கும்பலிலிருந்து இந்திரா கிளம்பி முற்போக்கு வாதியாகிவிட்டார்.

நாடு முன்னேறுகிறது. 22ஆண்டுகளுக்குப் பிறகு நமது (கம்யூனிஸ்டுகளின்) போராட்டம் வெற்றிபெறத் தொடங்கியுள்ளது. கம்யூனிஸ்டுத்தத்துவம் பிரகாசிக்கத் தொடங்கவும், பிற்போக்குவாதிகளும், ஏன் தேசிய ஆட்சிக்கு வந்தவர்களும் விழிக்கிறார்கள்.

எங்களுக்கு லட்சியம் பெரிது. அதை யார்செய்தாலும் ஆதரிப்போம்."

—பாலதண்டாயுதம்.
திருவரம்பூர் பேச்சு.

குறிப்பு:- அப்படியானால் உங்களுக்கு இனிமேல் தனிக்கட்சி எதற்கு? இந்திராவின் கட்சியுடன் இரண்டறக் கலந்து விடலாமே!

---

# நகராட்சியை எதிர்த்து தொழிலாளர்களின் அறப்போர்!

பொதுசுகாதாரத்தை பாதுகாப்பது நகராட்சிகளின் முதல் பெருங்கடமையாகும். ஆனால் திருப்பத்தூர் நகராட்சி நிர்வாகம் தற்போது ஆள்குறைப்பு செய்து வேலைப்பளுவை சுமத்தி பொது சுகாதாரத்தை அபாயகரமான போக்கில் கெடுத்து வருகிறது.

1-7-69-ல் 21 தொழிலாளரை வேலை இல்லை போகலாம் என்றனர். லேபர் ஆபீஸர் சமரசம் செய்தும் வேலைகொடுக்கவில்லை 21-8-69-ல் மூன்று மலம் துலக்கும் தொழிலாளரை நீக்கிவிட்டு அந்த இடத்துக்கு பூங்கா காவலாளிகளாக வேலை செய்துவரும் மூன்றுபேரை நியமித்துள்ளனர். இவர்கள் வேளாண்மை தொழில் செய்பவர்கள். வேலை இல்லாமல் போய்விடுமோ என்று அஞ்சி மலம் துலக்கும் வேலையை ஒப்புக்கொண்டுள்ளனர். இதனால் மலம் துலக்கும் வேலை சரிவர நடைபெறுமல் மற்ற தொழிலாளர் மீது வேலைப்பளு சுமத்தப்பட்டுள்ளது. 8 மலேரியா தொழிலாளர் வேலையை 4 சுகாதார தொழிலாளரை செய்ய வைக்கிறார்கள்.

80-ஆம் ஆண்டு விழாகொண்டாடிய திருப்பத்தூர் நகராட்சி மன்ற வரலாற்றில் 1-7-69-க்கு முன்பு ஏழை தொழிலாளரை வீட்டுக்கு அனுப்பும் "புண்ணியத்தை" எவரும் எப்பொழுதும் செய்யவில்லை.

புதிய ஆணையாளர் பொறுப்பேற்ற சில நாட்களில் இந்த "புண்ணியம்" ஏன் ஏற்பட வேண்டும்? நிதி நெருக்கடியை சரிகட்ட ஏழை தொழிலாளர் தான் பலியாக வேண்டுமா?

எப்போதையும்விட இந்த ஆண்டு வருமானம் ரூ. 7,75,000 மாக உயர்ந்துள்ளது. ஆகவே 3-ஆம் தர நகராட்சியை 2-ஆம் தரமாக உயர்த்தவேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டுள்ளது.

கடந்த 20 ஆண்டுகளாக சுகாதார தொழிலாளர் 137 ஆக மட்டும் உள்ளனர். உயரவில்லை. நகரமக்கள் எண்ணிக்கை 40 ஆயிரத்தை எட்டிவிட்டது. பொது கக்கூஸ் 20, தனியார் கக்கூஸ் சுமார் 4000. பாதைகளின் நீளம் 18.5 மைல். அதை ஒட்டி சாக்கடை நீளம்பெருகியுள்ளது. இவ்வளவு வேலையை 137 பேர் மட்டும் செய்வது நடைமுறையில் இயலவில்லை. டைரக்டர் 28-5-1942-ல் உள்ளபடி மேலும் அதிகமான தொழிலாளரை நியமிக்கவேண்டியுள்ளது. இந்த நேரத்தில் ஆள்குறைப்பு செய்வது தொழிலாளர் விரோதபோக்கும் பொது சுகாதாரத்தை கெடுக்கும் தவறான போக்குமாகும்.

இதனைமுறைப்படிதொழிலாளர் ஒற்றுமையாக கேட்பதால் மதுவிலக்கு சட்டதண்டனையை காட்டி வீட்டுக்கு அனுப்பிவிடுவதாக பயமுறுத்தப்படுகிறது. மல நாற்றத்தில் வேலைசெய்யும் தொழிலாளர்களிடம் மது நாற்றத்தைப்பற்றி கூறுவது சரியல்ல. இவர்கள் 90 சதமானம் பேர் தண்டிக்கப்பட்டிருக்கலாம். இந்த தண்டனையை கிரிமினல் தண்டனையாகக் கருதுவது இயற்கை, நீதிக்கு புறம்பானதாகும். ஆகையால் தொழில் அமைதி ஏற்பட ஆணையர்தொழிலாளர்விரோத போக்கை கைவிடவேண்டும்.

வேலை நீக்கம் செய்யப்பட்டுள்ள தொழிலாளர் அனைவருக்கும் உடனே வேலைகொடுக்க வேண்டும்.

வேலைப்பளுவை கணக்கெடுத்து புதிய நியமனங்கள் செய்ய வேண்டும்.

வேலை சரிவர நடக்க ஓர்க்ஸ் கமிட்டி ஏற்படுத்தவேண்டும்.

வேலைக்கு போதிய சாதனங்கள் கொடுக்க வேண்டும்.

மதுவிலக்கு தண்டனையை கிரிமினல் குற்றமாக கருதும் இயற்கை நீதிக்கு புறம்பான போக்கை கைவிடவேண்டும்.

தொழிலாளரை பழிவாங்காமல் நடத்தவேண்டும். என்ற கோரிக்கைகளைவைத்து தொழிலாளர்கள் போராடுகிறார்கள்.

# துரோகிகளின் கடைசி நாடகம்......

(1-ஆம் பக்கத் தொடர்ச்சி)

காங்கிரஸ், கேரளா காங்கிரஸ்மட்டுமல்ல! முஸ்லீம் லீக், ஐ. எஸ். பி. போன்ற கட்சிகளுக்கும் பெரும் கலக்கம். அவர்களின் வர்க்கநலன, நில உடமையாளரின வர்க்க-நலன் பாதிக்கப்பட்டது. கேரள, மே. வங்க ஐ. முக்களை ஒழித்துக்கட்டும சதித்திட்டம் தீட்டியுள்ள வலது கம்யூனிஸ்டுகள் இவர்களுடைய அதிருப்தியையும் பயன்படுத்திக் கொண்டு ஐ. மு. ஒழிப்பு வேலையை ஜரூராக செய்து முடித்து வருகிறார்கள். இந்தச் சதிகாரர்கள நிலச்சீர்திருத்தச் சட்டத்தை ஒரு புறம் எதாப்பவர்கள; மறுபுறத்தில் இந்திரா கோஷ்டிக்குத் துதி பாடுபவர்கள். இந்திராவின் காங்கிரசுடன் சேர்ந்துகொள்வதற்கு முன் முதல்கட்ட நடவடிக்கையே இன்று கேரளத்தில் நிகழ்ந்துள்ள நிகழ்ச்சிகள்.

மக்களது உணர்ச்சியைப் பற்றி, ஜனநாயக இயக்கத்தின் வளர்ச்சியைப்பற்றிக் கவலை கொள்ளாத வலது கம்யூனிஸ்டுச் சதிகாரர்கள் இன்று உள்ளூர குதூகலிப்பார்கள! தங்களின் சதித் திட்டம் நிறைவேறிக் கொண்டிருக்கிறது என்று உள்ளம் பூரிப்பார்கள!

ஆனல் இறுதியாக பதில் கூறப்போவது கேரள நாட்டு மக்கள் என்பதைக் கூடிய விரைவில் புரிந்துகொள்ளத்தான் போகிருர்கள். புரிந்து கொண்டாலும புத்தி வராது என்பது உண்மை. முன்பு ஒரு தடவை கேரள மக்கள் கொடுத்த அடியை மறுநாளே மறந்துவிட்டவர்கள் இவர்கள். எனினும் மீண்டும் சென்ற காலத்தில் கிடைத்த பதிலை விட நல்ல செம்மையான பதிலை வருங்காலத்திலும் கேரள மக்கள தருவார்கள்; சந்தேகம் வேண்டாம.

23—10—69 —கே. எம்.

## கேரள மக்களுக்கு...

(9-ஆம் பக்கத் தொடர்ச்சி)

உடைத்தெறிய சீர்குலைவாளர்கள் போர்க்கோலம் பூண்டிருக்கிருர்கள். மே. வங்க மக்கள் ஒன்று திரண்டு, "சீர் குலைவாளர்கள் தோற்கட்டும், ஐக்கிய முன்னணி வெல்லட்டும்" என்று ஒரே குரலில் பிரகடனம் செய்வார்களாக! சீர்குலைவில் இறங்கிய கட்சிகள் தங்களுடைய போக்குகளைத் திருத்துக் கொள்ளுமாறு கோருங்கள்! கேரளத்தில நடந்துக் கொண்டிருப்பதை வங்காளத்தில் நடத்த விடாமல் எப்பொழுதுமே உஷாராக இருப்பார்களாக! இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்ஸிஸ்ட்) எப்பொழுதுமே மக்களுடன் இருக்கும்; அது எப்பொழுதும ஐக்கிய முன்னணியின ஒற்றுமையையும் ஜனநாயக சக்திகளின ஒற்றுமையையும் காத்து நிற்கும. இந்த ஒற்றுமை இல்லாமல ஊறுப்போன படு மோசமான பிற்போக்காளர்களைத் தோற்கடிக்க முடியாது. எங்களது கட்சியின் கொள்கையை பொதுமக்கள் ஏற்றுக்கொண்டிருக்கிருர்கள் என்பது எங்களுக்குத் தெரியும் எங்களைத் தனிமைப் படுத்துவதற்காக எங்களை எதிர்ப்பவர்கள் செய்யும அனைத்து முயற்சிகளும் தோற்கும எனபதையும் நாங்கள் அறிவோம். அங்கு மிங்கும அடையாதபடி சீர் குலைவாளர்களை மூலையில் தள்ளி முளையடித்துவிட்டு, ஐக்கிய முன்னணி முன்னேறிக் நடைபோடும எனபதையும நாங்கள் நன்கறிவோம்.

---

## புதிய வெளியீடுகள்

1. பாங்க் தேசியமயமானபின் வலதுசாரிகளின் தடுமாற்றம்
   (எம். பசவபுன்னையா)
   விலை ... 0—30 காசு
2. கம்யூனிஸ்ட் கட்சியின் கொள்கை அறிக்கை
   விலை ... 0—20 காசு
3. தி. மு. க. அரசும் விவசாயிகளும்
   (விவசாய சங்க வெளியீடு)
   விலை ... 0—10 காசு

---

## ★ ஹோ-சி-மின் ★

### பி. ராமமூர்த்தி படங்கள்

12" x 16" அளவில் (காலண்டர் அளவில்) சிறந்த முறையில் தயாரிக்கப்பட்ட ஆப்செட் படங்கள்.

விலை 0—25 காசு

★ பிரதிகளுக்கு முந்துங்கள் ★

20 படங்களுக்கு மேல் வாங்குவோருக்கு 20 சத விகிதம் கழிவு உண்டு.

கிடைக்குமிடம்:
தமிழ் மாநிலக்குழு,
இந்திய கம்யூனிஸ்ட் கட்சி
(மார்க்சிஸ்ட்)
மதுரை-1.

---

★★★★★★★★★★★★★★

## தீக்கதிர்

**சந்தா விபரம்**

| | |
|---|---|
| தனிப்பிரதி | 25 காசு |
| 6 மாதச் சந்தா ரூ. | 6 00 |
| வருடச் சந்தா ரூ | 12 00 |

★★★★★ ★★★★★★★★

---



---



தீக்கதிர் அச்சகத்தில் (13, முதல் சந்து, வடக்குச் சித்திரை வீதி, மதுரை-1) அச்சிட்டு வெளியிடுபவர், ஆசிரியர்: கே. முத்தையா